ஓ

# சைவம்

ஆசிரியர்

**திரு. க. வச்சிரவேல் முதலியார்**, B. A., L. T.

காஞ்சிபுரம்.

தமிழ்நாடு அரசாங்கம்

1960

வெளியீடு:

**தமிழ்நாடு அரசினர் அறநிலைய ஆட்சித்துறை**

சென்னை - 600 034

# பொருள் அடக்கம்.

# சைவம்

## சைவம் என்னும் சொல்லின் பொருள்

சைவம் என்பது சிவசம்பந்தம் உடையது எனப் பொருள்படும். அஃது உலக முதற் பொருளாகிய கடவுளைச் சிவம் எனத்தெளிந்து வழிபடும் நெறிக்குப் பெயராகி வழங்கி வருகிறது. சைவம் எனினும், சிவநெறி எனினும், சைவ சமயம் எனினும் ஒக்கும்.

## சிவம் என்பதன் பொருள்

கடவுள், இறைவன், முதல்வன் என்றாற்போலப் பெரியோர்கள் உலக முதற்பொருளுக்கு இட்டு வழங்கிவரும் பெயர்கள் அம்முதற் பொருளின் ஒவ்வோரியல்பை நினைவூட்டும். **கடவுள்** என்னும் பெயர் யாவர் உணர்வையும் செயலையும் கடந்தது என முதற்பொருளின் எட்டாத நிலையினை அறிவிக்கும் **இறைவன்** என்பது எப்பொருளிலும் தங்குபவன் என அவன் எங்கும் உள்ள நிலைமையைக் குறிக்கும். **முதல்வன்** என்பது எப்பொருட்கும் முற்பட்டு நின்று அதனைத் தொழிற்படுத்துப்வன என எல்லாவற்றிற்கும் தான் சார்பாயிருந்து நடத்தும் வினைமுதலாத் தன்மையை (பரம ஆதார நிமித்த காரணன் ஆம் தன்மையை) உணர்த்தும். இவற்றைப் போலச் சிவம் என்னும் பெயர், முதற்கடவுள் எத்தகைய மாறுதலும் எய்துதல் இன்றித் தூய பேரின்பப் பொருளாய் அனுபவப்படும் தன்மையை உணர்த்துவதாகும். இது செம்பொருள் என்னும் சொல்லோடு ஒத்த பொருள் உடையது.

முதல்வன், உலகப் பொருள்களுள் ஒன்றல்லனாய்ப் பெண், ஆண், அலியெனும் பெற்றியனாய் நிற்றலின், அவன். இந்நெறிக்கண் சிவன் என ஆண்பாற் சொல்லாலும், சிவை (சிவா) எனப் பெண்பாற் சொல்லாலும், சிவன் என ஒன்றன்பாற் சொல்லாலும் ஒப்ப வழங்கப்படுதல் அறியத்தக்கது. ‘பெண்ணாண் அலியெனும் பெற்றியன் காண்க’ என்பது திருவாசகம்.

## சிவம் என்பதற்குக் காரணம்

சிவநெறித் தலைவர்கள் கடவுளைச் சிவம் செம்பொர்ள் எனச் சிறப்பித்துக் கூறுவதஏகுக் காரணம் தெரியுமா? (1) கடவுள் உயிர்களின் அறிவாற்றலுக்கு அப்பாற்பட்ட பொருளாயினும் மெய்யயுணர்வு நிலையில் தூய பேரின்பப் பொருளாய் அனுபவக்க வருவது என்பதும் (2) அத்தகைய உண்மையனுபவத்தை இம்மையிலேயே எய்திய அடிப்படை உண்மைகள் ஆகும். ஆதலின், கடவுளைக்

கலையுணர்வு மட்டும் கொண்டு பேசாது, உண்மை அனுபவம்பற்றி வழங்கலுறின், அதனை எத்தகைய மாறுதலும் இல்லாத தூய பேரின்பப் பொருள் எனக் குறிப்பித்தலே பொருத்தம் ஆம். ஆதல்பற்றி அஃது இந்நெறிக்கண் சிவம் எனவும் செம்பொருள் எனவும் சிறப்பித்துச் சொல்லப்படுவதாயிற்று. இச்சொல் இப்பொருள் பயக்கும் என்பதை -

"குறைவிலா மங்கலம் குணத்தன் ஆதலின்
நிறைமலம் அநாதியின் நீங்கி நிற்றலின்
அறைகுவர் சிவனென அறிவின் மேலவர்."

என்னும் காஞ்சிப் புராணச்செய்யுளால் அறிக, மங்கலக் குணமாவது தோற்றக் கேடுகளின்றி நித்தமாய், விகாரமின்றிச் செம் பொருளாய் நிற்றல்.

[ 'பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் வளர்க்கும் ஆரியனே - ' என்பது திருவாசகம்.]

## எது சைவம் ?

முதற் பொருள் உயிர்களின் உணர்வின் முதலாய், எல்லா உயிர்களையும் தொழிற்படுத்தி அவற்றின் பாசப்பற்றறுத்து அறிவை வளர்த்து வருவது.

ஆதலின் பொதுவாக நோக்குங்கால், எல்லா உயிர்களும் சிவ சம்பந்தம் உடையவையே; யாவும் சைவமே ஆ,. இப்பேருண்மையைத் திருஞானசம்பந்தர் புத்தர்களுக்குப் போதித்தார் எனப் பெரிய புராணம் கூறுகிறது. திருஞானசம்பந்தர் மதுரையிலிருந்து திரும்பும்போது திருத்தெளிச்சேரி என்னும் ஊர் வழியாக வந்தார். அப்போது அங்கிருந்த புத்தர்கள், சாரிபுத்தன் தலைமயில், திருக்கூட்டத்தில் இருந்த ஓர் அன்பருடன் வாதம் செய்து தோற்றனர்; பேச்சில் தோற்றபோதிலும் சிவ நெறியின் பெருமையைத் தெளியமாட்டாராய் மயங்கினர். திருக்கூட்டத்து அன்பர் அவர்களைத் திருஞானசம்பந்தர் திருமுன்பு உய்த்தனர். திருஞானசம்பந்தர் "நின்றனவும் சரிப்பனவும் சைவமேயாம்" எனும் உறுதிமொழி அருளி அவர்களைத் தெளிவித்தார். இன்னும் திருஞானசம்பந்தரது திருவவதாரங் கூறும்பொழுது, அவரைக் குறித்து, "தாவில் சராசரங்களெலாம் சிவம் பெருக்கும் பிள்ளையார்" எனப் பெரிய புராணம் கூறுகிறது. இவ்வாற்றால் எல்லா உயிர்களும் சைவமேயாம். ஆயினும் அவை தமக்கு இயற்கையேயுள்ள சிவசம்பந்தத்தை அருளாசிரியன் வெளிப்பட்டு உணர்த்தின் அல்லது உணரமாட்டா. ஆதலின் அவை அச்சம்பந்தத்தை உணர்ந்து, சிவத்தைத் தலைப்பட்டு நன்மையுறுதற்கு வேண்டும் ஆராய்ச்சியினையும் செய்திமுறைகளையும் வகுத்துக்கூறும் நெறியே சைவம் ஆகும்.

* ‘‘தெய்வமே சிவமே; சிவன் அருள் சைவம் -, சிவத்தோடு சிவத்தோடு சம்பந்தம் என்றான்’’ என்பது திருச்சிற்றம்பல நாடிகள் வாய்மொழி.

[1. எடுத்துக்காட்டாக, பௌத்தம், சமணம், கிறிஸ்துவம், இஸ்லாம் என்பவற்றின் வரலாற்றைக் காண்க. பிறவும் உண்மையான நோக்கின் அவ்வாறே ஆம்.]

# சைவத்தின் தொன்மை

சிவ வழிபாடும் சிவநெறியின் அடிப்படைக் கொள்கைகளும் வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட தொன்மை (prehistoric antiquity) உடையவை. இது நூல்களாலும் ஆராய்ச்சியாலும் விளங்கும் உண்மை பற்பல சமய்ங்களுள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு காலத்தில் ஒவ்வோர் ஆசிரியரால் நிறுவப்பட்டுப் பின் அவர் தம் மாணாக்கர்களால் உலகில் பரப்பப்பட்டு வந்தன என்பதை அவற்றின் வரலாறு தெரிவிக்கும். ஆயின் சைவம் என்பது அவ்வாறு ஒரு காலத்து ஒருவரால் நிறுவப்பட்டு நடப்பதன்று. நிலவுலகத்தில் பண்டுதொட்டுப் பயின்று வருவது. இதன் அடிப்படையாய் உள்ள ஞான நெறியினைச் சிவபெருமான் முதன் முதல் நான்கு முனிவர்க்கு ஓர் ஆலநிழர்கீழிருந்து விளக்கியருளியதாகத் திருமுறைகள் முழங்குகின்றன.

‘‘ஓரால் நீழல் ஒண்கழல் இரண்டும் முப்பொழுது ஏத்திய நால்வர்க்கு ஒளிநெறி காட்டினை’’

என்பது திருஞானசம்பந்தர் திருமொழி.

இந் நிகழ்ச்சியை உலகப் படைப்பின் தொடக்கத்தில் நிகழ்ந்ததாகவே திருஞானசம்பந்தர் குறிப்பிடுகிறார்.

இனி, சிந்து வெளியிலுள்ள மொகஞ்சோதாரோ (MohenjoDaro) என்னும் இடத்தில் சில ஆண்டுகளுக்கு முன் தோண்டி எடுக்கப்பட்ட புதைபொருள்களின் ஆராய்ச்சியால் புலனாகும் நாகரிகமும் பண்பாடும் மிக உயர்ந்தவை என்பதையும், அவை இன்றைக்கு 5,000 ஆண்டுகள் முற்பட்ட தொன்மை உடையவை என்பதையும், ஆண்டுக் கிடைத்த பொருள்களுள் சிவலிங்கங்களும், யோக வடிவின் அமைந்த தெய்வ உருக்களும் உள்ளன என்பதையும் எல்லோரும் உடன்படுகின்றனர். இதனால் சிவவழிபாடு வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்டதென்பது தெளிவு. இவ்விடத்தும் ஹரப்பா (Harappa) என்னும் இடத்திலும் கிடைத்த புதை பொருள்களை நன்கு ஆராய்ந்து, முதன்மையான அறிக்கையை வெளியிட்ட சர் ஜான் மார்ஷெல் (Sir John Marshal) என்னும் ஆங்கிலப் பெருமகனார் தமது அறிக்கையில் சிவநெறியின் தொன்மையைக் கீழ்வருமாறு வியந்து கூறுகிறார்.

மொகஞ்சோதாரோ, ஹரப்பா என்பவை மறைவாக வைத்திருந்து நமக்கு வெளிப்படுத்தும் புது வெளிப்பாடுகள் பலவற்றுள் முதன்மையாக் குறிப்பிடத்தக்கது யாதோவென்னில், சிவநெறியின் வரலாறு மாக்கற்காலம். அன்றி ஒருகால் அதனினும் முற்பட்டதொரு காலத்தை எட்டிக்செல்லுகிறது; அதுபற்றி அந்நெறிய உலகத்தில் இஞ்ஞான்றும் வழக்காற்றில் உள்ள மிகப் பழைய நெறி ஆகற்பாலது என்னும் கண்டுபிடிப்பே ஆகும் -, என்பது அன்னார் கூற்று.

சர் ஜான் மார்ஷல் மேலை நாட்டினராதலின் சைவத்தின் தொன்மை அவருக்குக் கண்டுபிடிப்பாகவும் (discovery) வியப்பைத் தருவதாகவும் உள்ளது. நம் பாரத கண்டத்தில் பண்டு தொட்டு இலக்கண வரம்புடையவையாய் வழங்கிவரும் செந்தமிழ், வடமொழி என்பவற்றை ஓரளவு அறிந்தார்க்குச் சிவநெறி தோற்றமில் காலமாக இருந்துவருகிறது என்பது இயற்கையாகத் தோன்றும்.

[1. “Among the many revelations that Mohenjo Daro and Harappa have had in store for us, none perhaps, is more remarkable than this discovery that Saivism has a history going back to the Chalco-lithic age or perhaps even further still and that it thus takes its place as the most ancient living faith in the world.” – Mohenjo Daro and the Indus Civilization. Vol. I. P. VIII.]

“இருமொழிக்கும் கண்ணுதலார் முதற் குரவர்” எனக் காஞ்சிப் புராணத்துட் குறிப்பித்தருளினர். இம்மரபு பெற்றியே கம்பரும் அகத்தியனாரக் குறிக்குமிடத்து,

“நிழற்பொலி கணிச்சிமலி நெற்றியுமிழ் செங்கண்
தழற்புரை சுடர்க்கடவுள் தந்ததமிழ் தந்தான்”

எனக் கூறினார்.

இனி, வட மொழியில் மிகப் பழமை வாய்ந்த பாடல்கள் இருக்குவேதத்து உள்ளவையே ஆகும். அவற்றுள், முதல் மண்டிலம் 164-ஆம் சூக்தத்து வரும் 46-ஆம் மந்திரம்,

“சத்தாகிய ஒன்றையே (ஒருவனையே) இந்திரன் என, மித்திரன் என, வருணன் என, அங்கி என, யமன் என, மாதிரிச்சுவான் (வாயு) என, நல்ல சிறகுள்ள கிப்பிய கருடன் என அறிஞர்கள் பலவகையாகக் கூறுகின்றனர்” எனப் படிக்கின்றது.

இதனால் ஒரு பெரிய உண்மையை நாம் அறிய முடிகின்றது வேத முனிவர்கள் முற்பட்ட காலங்களில், இயற்கையில் விளங்கித் தோன்றிய வியத்தகு ஆற்றல்களைத் தனித்தனிப் பல்வேறு தெய்வமாகக் கருதி வழிபட்டு வந்தனர்; பிற்காலத்து, அவ்வாற்றல்களை, வேறு வேறாகப் பிரித்துக் காணாமல் இணைத்து உணர்ந்து, அவற்றின் மூலத்தை ஒரு முழுமுதற் செம்பொருளாகக் கொண்டு வழிபடுவாராயினரென்பது.

அவ்வாறு உணர்ந்த முதற்பொருளை ஏகம் எனவும், சத்(து) எனவும் குறித்து வந்தனர், ஏகம் என்பது ஒன்று, ஒருவன் எனப் பொருள்படும். சத்து என்பது உள்ளது எனப் பொருள்பட்டுச் செம்பொருள், மாறுதலில்லாத பொருள் என்னும் கருத்தைத் தெரிவிக்கும்.

நாம் இயற்கை என வழங்கும் இவ்வுலகம் எண்ணிறந்த மாறுதல்களுக்கு உறையுளாய் உள்ளது; பன்மையுணர்வைப் பயப்பதாகவும் உள்ளது. ஆகலின் -, இதன்கண் ஒழுங்கும் முறை பிறழா நிகழ்ச்சியும் உளவாதற்குக் காரணமாயுள்ள முதற்பொருள் ஒன்றேயாய், மாறுதலில்லாததாய் நிற்பதெனல் பொருத்தம் அல்லவா? இதனை வேத முனிவர்கள் ஒரு நெறிய மனம் வைத்து உணர்ந்து வெளியிட்டருளினார்கள். இதனால், வேதங்களிலும் உபநிடதங்களிலும் ஏகம், சத்(து) என்னும் சொற்களின் பிரயோகம் வருகிற இடங்களில் எல்லாம் முதற் பொருளின் சமட்டி நிலை குறிக்கப்படும் என்பது உணரப்படும். சமட்டி என்பது முழுமுதல், இணைந்தது எனப் பொருள்படும், இதற்கு எதிர்ச்சொல் வியட்டி என்பது, வியட்டி பிரிவுநிலை, ஒருபொருளின் ஏகதேசம், எடுத்துக் காட்டாக, ஏ நல்லோய் சத்தாகிய ஒன்றே முதற் கண் உலகத்தோற்றத்தின் முன் அத்விதீயமாய் இருந்தது எனச் சாந்தோக்கிய உப நிடதத்தில் வரும் அவ்விரு சொற்களும் பரம் பொருள் வரையறை உணர்த்தி வருதல் அறியத்தக்கது.

இனி, இவ்வடையாளங்கொண்டு நோக்கும்போது, சிவபிரானே சமட்டிரூப முழுமுதலாக வேதங்களிலும் உப நிடதங்களிலும் கூறப்படுகின்றான் என்பது விளங்கும். எடுத்துக்காட்டாகச் சுவேதா சுவதர உபநிடதத்தில் கடவுளின் முழுமுதற்றன்மையைக் கூறுமிடத்து,

“ஒருவன் உருத்திரனே, (பிரம வித்துக்கள்) இரண்டாவதொன்றைக் கொள்வார் அல்லர்; எவன் உலகனைத்தையும் தன் ஆளும் ஆற்றலால் ஆளுகிறானோ அந்த” என்னும் வசனம் வருகிறது.

இங்கு உருத்திரன் என்றது பரமசிவனை; பிறப்பு, வீடு என்பவற்றை ஒன்றன்பின் ஒன்றாக உயிர்களுக்கு வழங்கி, அவற்றைத் துன்பத்தின்றும் கடப்பித்தலின் வந்த காரணப்பெயர். ‘ருதம்த்ராவயதி - துன்பத்தினின்றும் கடப்பிக்கிறான்’ எனச் சொற்பொருட் காரணம் (வியுத்பத்தி) கூறப்படுகின்றது.

சிவபிரானை ஒருவன் என்றால் வேதவழக்கு என்பது பெற்றியே மாணிக்க வாசகர்.

“ஒருவன் என்னும் ஒருவன் காண்க!” என்றருளிச் செய்வாராயினர்.

# சைவம்

திருவாய்மொழி அருளிய நம்மாழ்வாரும், கண்ணபிரான்மேல் முழுமுதற்றன்மையை ஏற்றிய புகழுமிடத்து, ‘‘ஒளிமணி வண்ணன் என்கோ ஒருவன் என்று ஏத்த நின்ற நளிர்மதிச் சடையன் என்கோ ! ’’

என இவ்வைதிக சித்தாந்தத்தை உடன்பட்டுக் கூறலின், இம் முடிபே உபய வேதாந்தத்திற்கும் ஒத்த முடிபாம் என்பது இனிது துணியப்படும். வைதிக சித்தாந்தம் - வேத சம்பந்தமான முடிந்த முடிபு; உபய வேதாந்தம் - இரண்டு வேதங்களின் அந்தம், தென் மொழி வடமொழிகளில் எழந்த மெய்யறிவுநூன் முடிபு. இவ்வழக்குப்பற்றியே ‘‘நீலமேனி வாலிழை பாகத்து ஒருவன்’’ எனச் சங்கத்துச் சான்றோரும் கூறியுள்ளார்.

இனி, சத்தென்னும் சொல்லின் பொருளாகக் கூறப்படுபவரும் சிவபெருமானே ஆவர்.

‘‘புருடனாவான் மகானாகிய சத் தெனப்படும் உருத்திரனே ! அவனுக்கு வணக்கம்!’’ - என யசுர் வேதத்தும், தைத்திரீய ஆரண்யகத்தும் வருவது கருதத்தக்கது.

சத் தென்னும் சொல் சத்தியோடியைந்த சிவன் எனப்பொருள் பயக்கும் என்பதை நீலகண்ட சிவாச்சாரியர் கீழ்வரும் பழைய மொழி (அபியுக்தசூக்தியைக்) காட்டி நிறுவுகின்றார்.

‘‘சத்தியும் சிவனும் சத்தென்னும் சொல்லின் பகுதி விகுதிகளாக ஓதப்படுகிறார்கள். அவ்விருவரும் தமது ஒருமையினாலும் உலகத்திற் பிரிப்பின்றிக் கந்துள்ளமையினாலும் எல்லா உலகமும் ஆயினார்’’ என்னும் பொருள் உடையது அப்பழைய சொற்றொடர்.

இனி, அறிவு நூற்பொருள்களெல்லாவற்றையும் மக்கள் முறைப்படக் கொண்டு உணர்ந்துய்யுமாறு சிவஞானபோதம் என்னும் உயர் ஞானத் தலைமணி நூலை அருளிச் செய்த மெய்கண்ட தேவரும் அச்சொல் சிவனது திருவருளையே உணர்த்தும் என அளவை முறையால் ஆய்ந்து முடிக்கின்றார். அவர் கூறும் முடிபு -

[1. 6 ஆம் சூத்திரம் 2- ஆம் அதிகரணம் உதாரண வெண்பா.]

‘‘சத்(து) ஆம் அறிவறியாமெய் சிவந்தாள் ஆம் ...’’ என்பது. இதன் பொருள் சுட்டறிவினால் அறியப்படாத மெய்ப் பொருள் சாந்தோக்கியம் முதலிய உப நிடதங்களால் தென்று ஓதப்படும். அவ்வாறு ஓதப்படும் மெய்ப்பொருள் சிவன் அருளேயாம், சூனியம் அன்று. அச்சிவனருள் சைவ உபநிடதங்களிலும்

சைவாகமங்களிலும் அந்நியமின்றி நின்றுணரும் அனுபவ மாத்திரையில் விடயமாவது என்று ஓதப்படும் என்பது.

மேற்காட்டியவற்றால், வடமொழி தென்மொழி என்னும் இரண்டிலும், மிகப்பழைய காலந்தொட்டு தலையாய ஞான நூல்களால் ஓதப்படும் ஆராயப்பட்டும் வருவது சிவனது திருவருளே என்பது உணரப்படும். இதனால் சைவத்தின் தொன்மை இனிது விளங்கும். தலையாய அறிவுடையார் யாவர்க்கும் இவ்வுண்மை உடன்பாடாவதே என்னும் திருவுள்ளக் குறிப்பாற்றான் திருஞான சம்பந்தப் பிள்ளையார்,

"தம்மலர் அடியொன்று அடியவர் பரவத்
தமிழ்ச்சொலும் வடசொலும் தான் நிழல் சேர
அம்மலர்க்கொன்றை அணிந்த எம்மடிகள் அச்சிறு
பாக்கமது ஆட்சி கொண்டாரே"

- திருமுறை 1, 77, 4

என்றருளிச் செய்வாராயினர்.

## தமிழும் சைவமும்

வடமொழி தென்மொழி இரண்டிலும் கடவுள் நெறியை விளக்கும் நூல்கள் பலவும் சிவபிரானையே சமட்டிரூப முழுமுதலாக வைத்துக் கூறுதலில் ஒருப்பாடுடையன என்பது மேலே காட்டப்பட்டது. தமிழின்கண் உலகியல் கருதி எழுந்த தொல்காப்பியம், திருக்குறள் என்னும் பெரு நூல்களும் சங்கச் செய்யுட்களும் சங்க காலத்து இறுதியில் தோன்றிய சிலப்பதிகாரம். மணிமேகலை என்னும் பெருங் காப்பியங்களும் இவ்விதிக்கு விலக்காக இல்லை.

உப நிடதங்களும் பிரம சூத்திரமும் பரப்பிரமத்திற்கு இலக்கணம் கூறுமிடத்து, எல்லாப் பொருள்கட்கும் முன்னே நிற்பதாய், அவற்றின் தோற்றம், நிலை, இறுதி முதலியவற்றிற்குக் காரணமாய் நிற்பது பரப்பிரம்மம் எனக் கூறும். சைவ நூல்கள், சிவ பெருமானே எல்லா உலகங்களையும் ஒருங்குடன் ஒடுக்கி, அம்முற்றழிப்புக் காலத்தில் தான் ஒருவனேயாய் நின்று ஆடுவன் எனக்கூறும் இக்கருத்துப்பற்றியே சிவபெருமானுக்குச் "சுடலையாடி" என்பதொரு பெயர் வழங்குவதாயிற்று. எட்டுத் தொகை நூல்களுள் ஒன்றாகிய கலித்தொகையில் கடவுள் வாழ்த்துச் செய்யுள் இக்கருத்தையே கொண்டதாகவுள்ளது. இதனால் "உலகம் யாவும் யாண்டு ஒடுங்கும், அவை ஆண்டு நின்றே தோன்றும்" என்னும் நியாயத்தால் சிவபிரானது முதன்மை தெனியப்படும் என்பது சான்றோர்களது துணிபு இக்கருத்தைச் சிவஞானபோத முதற் சூத்திரம்

> ''ஒடுங்கி மலத்து உளதாம்;
> அந்தமாதி என்மனார் புலவர்''

என்பதனாற் பெற வைக்கின்றது.

இதனைத் தொல்காப்பியர் காஞ்சித்திணையின் பொருட்பகுதியை விரிக்கும்போது,

> ''மலர்தலை உலகத்து மரபுதன் கறியப்
> பலர்செலச் செல்லாக் காடு வாழ்த்து''

என்பதனாற் குறிப்பிக்கின்றார்.

இதன்கண் வரும் காடு என்னும் இடப்பெயர் இடத்தின் நிகழ் பொருளாகிய முதல்வனைக் குறிக்கும் காஞ்சித்திணை என்பது வெறும் நிலையாமையை மட்டும் உணர்த்துவதன்றி, வீட்டின்பம் ஏதுவாக அதனைச் சான்றோர் சாற்றும் நன்னெறியை யுடையது எனவே உரையாசிரியர்கள் கொள்வர். ஆதலின், அத்திணை வீடருளவல்லோனாகிய சிவபிரானது மூவாச்சாவாச் செம்பொருட்டன்மையின் வைத்து முடிக்கப்பெறுதல் அறிந்தின்புறுதற்கு உரியது, இன்றும் சைவ சித்தாந்தத்துட் கூறப்படும் பொருள் பற்றிய ஆய்வுக்கு வேண்டப்படும் இன்றியமையாத அடிப்படை உண்மைகளெல்லாம் தொல்காப்பியத்துட் கூறப்படுவனவாக இருத்தல் சிவஞான சித்தி முதலிய அருணூல்களின் உரைகளால் விளங்கும்.

இனி, திருக்குறளும் சைவசித்தாந்தச் செம்பொருள் தெருட்டுவதாகவே உள்ளது, அறத்துப்பால் இறுதியில் அறத்தின் பயனாகிய ஞானம் கூறப்படுகிறது. அது நிலையாமை, துறவு மெய்யுணர்தல், அவாவறுத்தல் என்னும் நான்கு அதிகாரங்களாற் கூறப்படுகின்றது. சைனம் முதலாகப் பிற சமயம் பற்றி எழுந்த நூல்கள் இவற்றுள் நிலையாமை என்னும் அதிகாரத்து வரும் பொருளையே இளமை நிலையாமை, செல்வம் நிலையாமை, யாக்கை நிலையாமை என விரித்துக் கூறும்; புறத்துறவை வற்புறுத்தும் மெய்யுணர்தல் என வரும் அதிகாரத்துப் பொருளை விரித்துக் கூறாமலே விட்டு விடும். ஆனால் சைவ சித்தாந்த நூல்களோ அவை யெல்லாவற்றையும் ஒருங்கெடுத்துக் கூறுவதோடு. மெய்யுணர்தல் அதிகாரத்துப் பொருளை மிக விரிவாக நிச்சயித்துக் கூறும்.

> ''ஐயணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே
> மெய்யுணர்வு இல்லா தவாக்கு''

என்னும் பாட்டின் பொருளே,

“ஈண்டு இவ்வான்மாக்களுக்கு முற்செய்தவத்தான் ஞானம் நிகழும் என்றது, மேற்சரியை கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டியல்லது மோக்ஷத்தைக் கொடா ஆகலான்” -‘ என்பதனால் மெய்கண்ட தேவரால் கூறப்பட்டது. (1)

“ஓர்த்து உள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப்
பேர்த்து உள்ள வேண்டா பிறப்பு”

[ சிவ ஞான போதம் 2 ஆம் சூத். முதலதிகரணம் - வார்த்திகம்.]

என்னும் பாட்டின் பொருளையே,

“ஊனக்கண் பாசம் உணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி”

எனச் சிவஞான போதம் ஒன்பதாஞ் சூத்திரம் விரித்துக் கூறுகின்றது. பிறவும் இவ்வாறே உணர்ந்து கொள்ளக் கூடுமாதலின், இங்கு விரிக்கப்படவில்லை.

மேற்காட்டிய குறட்பாவில் வந்துள்ள உள்ளது என்னும் சொல்லும்,

“பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்ப தறிவு”

என்பதில் வரும் செம்பொருள் என்னும் சொல்லும் சாந்தோக்கியம் முதலியவற்றுள் பிரயோகிக்கப்படுகிறது என மேற்காட்டிய சத்தென்னும் சொல்லின் பரியாயமாகக் கூறப்பட்டிருத்தல் அறியத்தக்கது. (2)

[ 2. இதன் விரிவைத் திருக்குறளின் உட்கிடை சைவ சித்தாந்தமே என்னும் ஆராய்ந்சி நூலுட் காண்க.]

இனிச் சங்கச் செய்யுட்களும், சிலப்பதிகாரம், மணிமேகலை என்னும் பெருங்காப்பியங்களும் அக்காலத்து மக்கள் சிவபிரானது முதன்மையினையே முதன்மையாகக் கொண்டிருந்தனர் என்பதைக் குறிப்பதை விளக்க மேற்கோள்கள் காட்டப்புகின் மிக விரியும். அன்றியும் அவையெல்லாம் பிறராற் காட்டப்பட்டுள்ளன. அந்நூல்கள் எவற்றுள்லும், முதற்பொருளின் வியட்டி நிலையைக் குறித்து, நிலமும் காலமும் காரணமாகத் தோன்றி நடக்கும் கருப் பொருள்களுள் ஒன்றாக வைத்துக் கூறப்படும் நிலத்தெய்வமாகச் (மாயோன், சேயோன், வருணன், வேந்தன், காடுகிழாள் என்பது போலச்) சிவபிரானைக்கூறும் வழக்கு இல்லை என்பதும் அவையாவும் சிவபிரானைக் கூறுமிடத்தெல்லாம் அவனை எல்லாத்

தெய்வங்களுக்கும் முற்பட வைத்து, அவன்றன் சமட்டிரூப முழு முதற் செம்பொருட்டன்மைஅயித் தெளியுமாறு இறையோன், பெரியோன், உயர்ந்தோன், அந்தணன், ஒருவன் எனப் பிரித்து வைத்து உயர்வு கூறி வருவதும் சிந்தித்தற்கு உரியவை.

[1. சிவநெறிப் பிரகாசப் பதிப்பின் முன்னுரை திரு. க. அநவாத விநாயகம் பிள்ளை, எம். ஏ. எல். டி.

2. ‘‘பா அல் புளிப்பினும் பக லிருளினும்
நா அல் வேத நெறி திரியினும்
திரியாச் சுற்றமொடு முழுதுரேண் விளக்கி
நடுக்கின்றி நிலியரோ அத்தை’’ (புறம் - 2 17-20)

‘‘அறங்கரை நாவின் நான்மறை முற்றிய
அதங் கோட்டா சாற்கு அரில்தபத் தெரிந்து’’
(தொல். சிறப்புப் பாயிரம்)

என வருதல் காண்க.]

இவற்றை யெல்லாம் உற்று நோக்கின், சிவநெறியும் அந்நெறியின் அடிப்படை உண்மைகளும், செந்தமிழ்ச் சுவையாகவும் அதன் பயனாகவும் உள்ளவை என்பது இனிது விளங்கும். இதனால், ‘‘சைவ சமயமும் சைவசித்தாந்த மதமும் தமிழ்நாட்டில் நெடுங் காலமாய்ப் பயின்று வருகின்றன. இவ்விரண்டும் தமிழ் நாட்டிலே தோன்றித் தமிழர்களாலே ஆதியில் வளர்க்கப்பட்டன என்பதற்கு நியாயம் பலவுண்டு’’, என்றாற்போல அறிஞர்கள் துணிந்துரைக்க முன் வருவாராயினர். ஆயினும், சிவநெறி காஷ்மீரம், நேபாளம், கூர்ச்சரம் முதலிய வடநாடுகளிலும் இருத்தலாலும், ஆங்குச் சிவகாம வழக்கு உண்மையாலும், சைவ சித்தாந்தக் கொள்கைகளை உணர்த்தும் நூல்கள் பல வடமொழிக் கண் தொன்றுதொட்டு இயற்றப்பட்டு நடைபெறுவதாலும், தொல்காப்பியம், திருக்குறள், சங்கச்செய்யுள் என்பவை நால்வேத நெறியினையும் நான்மறை வழக்கையும் தழுவியே உள்ளன என்பது மேற்காட்டப்பட்டமையாலும் இந்நெறியைத் தமிழ் நாட்டிற்கே உரியதெனக் கூறுதல் பொருத்தம் அன்று. இவ்வாறு முடிவு கூறதற்கண் ஒரு வெளிப்படையான உண்மையை மறைத்தல் இயலாது. ‘‘சிவ வழிபாடும் சிவநெறி முடிபுகளும் இருமொழியிலும் இருப்பினும், அவை தூய்மையும், நிறைவும், தெளிவும் பெற்று விளங்குவது செந்தமிழ் மொழியில்தான்’’ என்பது. தென்னாடுடைய சிவனே போற்றி எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி எனத் ‘‘திருவாதவூர் மகிழ் செழுமறை முனிவர்’’ அருளியது இக்கருத்தே பற்றிப் போலும்.

மேலும் ஒரு கருத்து இங்குக் குறிப்பிடத்தக்கது. சிவநெறியின் தொடக்கம் நமது ஆராய்ச்சியில் அகப்படுதல் இன்றி, வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட பழமையில் மறைந்து விடுகிறது. அப் பழமை வேத காலத்துக்கு முற்பட்டதென்றும்,

# சைவம்

இக்காலத்து உள்ள இந்துமத அடிப்படை உண்மைகளும் கொள்கைகளும் ஆரியர்கள் இந்நாட்டிற்கு வருவதற்கு முற்பட்ட காலத்தே இங்கிருந்த மக்களிடையே தோன்றி வளர்ந்தவையே என்றும் ஆராய்ந்து முடிவி காணும் அறிஞர்களும் உளர். (1)

[ 1. எடுத்துக்காட்டாக, சர்ஜர்ன்மார்ஷல் என்பவர் கூறுவதைக்காணலாம்.

"It is likely that the Sanskrit word Siva bears phonetic resemblance to the pre-Aryan name for this God." "Many of the basic features of Hinduism are not traceable to an Indo-Aryan source at all. They come into view not in the earliest Vedas, Brahmanas, Upanishads and Epics … when the Vedic Aryans had long since amalgamated with the older races and absorbed to some measure of their culture and teachings – "]

அம்முடிபின் உண்மை எதுவாயினும், இக்காலத்து நம்மிடையே உள்ள நாகரிகமும் பண்பாடும் பல மக்கள் இனங்களின் கூட்டுறவால் வந்துள்ள கலப்பு நாகரிகப் பண்பாடுகளே என்பதில் ஐயமில்லை. கங்கையும் யமுனையும் வேறு வேறு தோன்றி ஒழுகிவரினும், அவை பிரயாகையில் கலந்து ஒன்றானபின், கங்கையின் நீர் இது, யமுனையின் நீர் இது என எங்ஙனம் பிரித்துக் காணுதல் இயலும் இது போன்றதே தமிழ் ஆரிய நாகரிகப் பண்பாடுகளின் கலப்பு என்றலே அமைவுடையது.

## சைவ இலக்கியங்கள்

(1) **ஆராய்தலும் நெறிப்படலும்** - நாம் உளங்கொள்ளும் பொருள்களெல்லாம் இரு வேறியல்புகளை உடையவை ஆகும். அவை அளக்கப்படும் இயல்புகள் (metrical aspects) அளக்கப்படுதலின்றி அனுபவிக்கப்படும் இயல்புகள் (nonmetrical aspects) என்பவை. நம் கண்முன் தோன்றும் ஒருவரைப்பற்றி, அவரது உயரம் பருமன், நிறை, வயது என இவ்வாறு அறிவோமாயின், அளக்கப்படும் இயல்புகளை ஆராய்ந்து அறிகிறோம். அவ்வாறன்றி, அவர்தம் அழகு, குணம், பேச்சின் இனிமை முதலியவற்றில் ஈடுபட்டு உணர்வோமாயின் அளக்கப்படாத இயல்புகளை உணர்ந்து அனுபவிக்கிறோம். இவை போன்று சமய உண்மைகளை அறியும் வகையும் இருவகைப்படும். ஒன்று ஆராய்ந்து அறிதல், மற்றொன்று உணர்ந்து நெறிப்படல், உண்மையில் ஒரு சமயத்தால் பயன் பெறுவார் அதனை ஆராய்தலைவிட உணர்ந்து நெறிப்படலே செய்யத்தக்கது. நெரிப்பாட்டிற்கு ஆராய்ச்சியும் ஓரளவு வேண்டத்தக்கவே ஆயினும் ஆராய்ச்சியில் மிகைபடச் செல்லுதல் தமக்கும் பிறர்க்கும் ஏதம் தரும். இக்கருத்துப் பெற்றியே திருஞானசம்பந்தப் பிள்ளையார்,

"எதுக்க ளாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்
சோதிக்க வேண்டா; சுடர்விடுளன் எங்கள் சோதி;
மாதுக்கம் நீங்க லுறுவீர் மனம்பற்றி வாழ்மின்"

என்றருளிச் செய்வாராயினர்.

(2) நெறி உணர்த்தும் நூல்கள் - இவ்வாறு நெறிப்பாட்டு ஒழுகுவோர்க்கு உண்மை நூல்கள் எனச் சான்றோர்கள் கொண்டவற்றை ஔவையார் தமது நல்வழியில்

தேவர் குறளும் திருநாள் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியுங் - கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகம்என் றுணர்

என வரையறுத்துக் கூறியுள்ளார்,

இப் பாட்டின் பொருள் ''திருவள்ளுவர் அருளிச் செய்த திருக்குறளும், நான்கு வேதங்களின் முடிவு எனப்படும் உபநிடதங்களும், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், நம்பி ஆரூரர் என்னும் திருநெறித்தலைவர் மூவர் அருளிச் செய்த இசைத் தமிழாகிய தேவாரமும் திருவாதவூர் முனிவர் (மாணிக்கவாசகர்) அருளிச் செய்த திருச்சிற்றம்பலக்கோவை, திருவாசகம் என்னும் இயற்றமிழும், திருமூலர் அருளிச் செய்த திருமந்திரமாலையும் ஒரே பொருள் முடிபு உடையவை. ஆகலின் அவற்றை உலகத்திலுள்ள நன்மக்கள் உயர்ந்த பிரமான நூல்களாகக் கைக்கொண்டு ஒழுகுவர்'' என்பது. இவற்றோடு உண்மை நாயன்மார் வரலாறு கூறும் பெரிய புராணமும், சிவஞானபோதமும் இன்றியமையாது கற்றுணரத்தக்கவை.

## சைவ இலக்கிய வரலாறு

**பழங்காலம்** - மேலே குறித்தவாறு நெறிப்பாடு உடைய மக்களே இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் நம் தமிழகத்லே வாழ்வாங்கு வாழ்த்து வந்த தமிழ் மக்கள், ஆகலின், சைவ சமயமும் அக்காலத்தில் சமயம் என வழங்கப்படவில்லை. திருநெறி, மெய்ந்நெறி, முன்னெறி, சிவமாநெறி என்றாற்போல நெறி எனவே அதனை வழங்கி வந்திருக்கின்றார்கள்.

**சமயமும் நெறியும்** - சமயம் என்பதற்கும் நெறி என்பதற்கும் வேறுபாடு உண்டு. சமயம் என்னும் சொல் நியமிக்கப்பெற்றது, வரையறை செய்யப்பட்டது என்னும் பொருளைத் தரும். வினைவயப்பட்ட மக்கள், தம் உலக அனுபவத்ததிற்கு ஏற்பத் தம் அறிவு கொண்டு சில முடிவுகளைத் துணிந்து, நிறுவி, மக்களிடைப்பரப்பி வருவனவெல்லாம் சமயம் எனப்படும். அப்படி நிறுவும்போது, தம் கொள்கைக்கு ஆதாரமான நூல், தருக்கம், தத்துவக் கோட்பாடு, வீடு என்னும் நான்கு வகையில் வைத்துத் தம் கொள்கைகளை நிறுவுவார்கள். இவ்வாறு தம்தம் கொள்கைகளை

நிறுவுவோரே சமயக் கணக்கர் அல்லது மதவாதிகள் எனப்படுவரி. மதவாதிகள் மேற்கூறிய நால்வகை பற்றித் தருக்கம் செய்வோர் என்பதை

''மெய்த்திறம் வழக்கு நன்பொருள் விடெனும்
இத்திறம் தம்தம் இயல்பினிற் காட்டும்
சமயக் கணக்கரும்''

என்னும் மணிமேகலை - அடிகளால் உணரலாகும்.

[1. விழாவறை காதை, 11-13.]

இத்தகைய சமயவாதத்தைப் பண்டு தமிழ்ச் சான்றோர்கள் விரும்பவில. கல்லாடனார்,

''சமயக் கணக்கர் மதிவழி கூறாது
உலகியல் கூறிப் பொருள் இது என்ற
வள்ளுவன்''

என்றமை கருதத் தக்கது ஆதலினாற்றான், சிவநெறி, பழங்காலத்துச் சமயம், மதம் என்னும் பெயர்களால் வழங்கவில்லை, திருஞானசம்பந்தர் தம் அருட் பாடல்களைத் ''திருநெறிய தமிழ்'' எனவே குறிக்கின்றார். சேக்கிழாரும்,

''உலகியல் வேதநூ லொழுக்கம் என்பதும்
நிலவு மெய்ந்நெறி சிவநெறிய து என்பதும்
பலர்புகழ் தென்னவன் உணரும் பான்மையால்''

எனவும்,

''ஓங்கும் பொருட் சமய முதற் சைவநெறி
தான்பெற்ற புண்ணியக் கண் இரண்டு''

எனவும் கூறுதல் கவனிக்கத் தக்கது. சான்றோர் பலரும் சென்றவாற்றால் செல்லுதல் அல்லது நெறி நிற்றல் ஆகும்.

புத்தம், சைனம், அத்வைதம், துவைதம், விசிட்டாத்துவைதம் என்றாற்போல்வன வெல்லாம் ஒவ்வொராசிரியரால் நியமிக்கப் பெற்றுப் பின் பிரசாரம் செய்யப்பட்டவையாதலின், அவையெல்லாம் மதம் எனவோ சமயம் எனவோ வழங்கப்படுமே தவிர நெறி என வழங்கப்படுதல் இன்று. பிற்காலத்தில் நெறி என்பது சமயத்திற்கும் பரியாயமாயிற்று.

**குழப்பக்காலம்** - கிறித்து சகாப்தத்திற்கு முன் தமிழகத்தில் சமயக் கணக்கர் என்போர் தோன்றவில்லை. முதல்முதல் பௌத்த தருமத்தைப் பிரசாரம் செய்யும்

சமயக் கணக்கர் இந்நாடில் தோன்றினர். அசோகர் பௌத்த தருமத்தை எங்கும் பரப்ப எடுத்துக்கொண்ட முயற்சி வரலாற்று முதன்மை உடையதன்றோ ! சற்றேறக் குறைய அதே காலத்தில்தான் சைன சமயக் கணக்கரும் தமிழகத்தே நுழைந்தனர். இவர் எல்லாரும் தாம் கொண்ட கொள்கைகளை அளவை முறைகளால் நிறுவிப் பிற கொள்கையினரைத் தம் கொள்கைக்கு இழுக்கும் பேச்சு வன்மையும் பயிற்சியும் பெற்றவர்கள். இவர்கள் தமிழகத்தே நிலைக்கத் தொடங்கிய பின்னரே.

“ஒன்றே பொருளெனின் வேறென்ப; வேறெனின்
அன்றென்பது ஆறு சமயத்தார் -,”

[1. திருவள்ளுவமாலை.]

எனப்பட்ட பல்குழு தோன்றிக் குழப்பமான கருத்துக்களை வெளியிடத் தொடங்கின. இக்குழப்பு காலத்திற்குமுன், மக்கள் அடிப்பட்ட சான்றோர் சென்ற நெறி பெற்றியே அறவுணர்வும் கடவுள் உணர்வும் பெற்றனர்; பெற்று உலகியல் மெய்ந்நெறி என்னும் இவைபற்றி ஒழுகி, அமைதியும் இன்பமும் உடையவராய் வாழ்ந்து வந்தனர்.

**திருக்குறள் தோற்றம்**. - சமயக் கணக்கர்களால் மக்கள் அமைதி வாழ்வை இழக்க நேர்ந்த காலத்தில்தான் திருவள்ளுவர் ஒப்புயர்வற்ற பொது மறையாகிய திருக்குறளை இயற்றியருளினார். இக்காலம் கிறித்து சகாப்தத்தின் தொடக்கமாக இருக்கலாம். தமிழ்ப் பெருமக்கள் தம் பண்டை நன்னெறியினைத் தெளிவாக உணர்ந்து, புதியனவாகப் போந்த கொள்கைகளுள் தள்ளுவன தள்ளிக் கொள்வனகொண்டு, ஒழுகி, நலன் பெறுதற்கு இப்பெரு நூல் உரையாணியாக அமைந்து நிலவிற்று.

திருவள்ளுவர் “எல்லா நெறியிலும் நன்மையைக்கொண்டு ஒழுகவேண்டும்; ஒருவன் தான்கொண்ட நூல் நெறி பற்றியே ஒழுகினால் போதாது; மற்று உலகத்தோடொட்ட ஒழுகலைக் கற்கவேண்டும், - அதாவது, அறநூல் சொல்லியவற்றுள் தன் காலத்திற்கு ஏலாதன ஒழித்து, சொல்லாதனவற்றுள் ஏற்பன கொண்டு, உயர்ந்தோர் பலரும் ஒழுகுமாற்றான் ஒழுகக் கற்க வேண்டும்” என்றாற்போலப் பல ரிய ஒழுகலாறுகளை விதித்துள்ளார். உபநிடதக் கருத்துக்களையும், சிவாகமக் கருத்துக்களையும் மெய்யுணர்தல், கடவுள் வாழ்த்து முதலிய அதிகாரங்களில் மேற்கொண்டு கூறியுள்ளார். ஆயினும், யாதேனும் ஒரு நூலையோ அல்லது பலநூல் தொகுதியையோ குறிப்பிட்டு இவற்றையே பிரமாணமாகக் கொள்க எனக் கூறவில்லை என்பது சித்தித்தற்கு உரியது.

[1. “எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருள் - மெய்ப் பொருள் காண்ப தறிவு” - குறள், 423.]

**திருவள்ளுவர்க்குப்பின்**. - இனி, திருவள்ளுவர் காலத்திற்குப் பின், தமிழகத்தே சிவநெறி உச்சநிலையில் இருப்பினும், பிற தெய்வ வழிபாடும் பிற சமயப்

பிரசாரமும் இருந்தன என்பது கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் தோன்றினவாகக் கருதப்படும் சிலப்பதிகாரம், மணிமேகலை என்னும் நூல்களாற் புலனாகின்றது. அப்பொழுது சிவநெறியைச் சிறப்பாக உணர்த்து ஒழுகுவதற்கு என்ன நூல்கள் வழக்கில் இருந்தன என்பது தெரியவில்லை. ஆயினும், அக்காலத்து வாழ்ந்த சிவநெறியாளர்கள் கடவுளைப் பற்றிக் கொண்டிருந்த கொள்கைகளுட் சில மணிமேகலையால் விளங்குகின்றன.

[2. ''உலத்தோ டொட்ட ஒழுகல் பலகற்றும் - கல்லார் அறிவிலா தார்'' - குறள், 140.]

இறைவன் நிலம், நீர், தீ, வளி, வெளி, ஞாயிறு, திங்கள் உயிர் என்னும் எண்வகைப் பொருளோடு புணர்ந்து, உலகமே உருவமாகத் தான் அதற்கு உயிராக நிற்பவன்; கலையுருவினன் (1) , யாவற்றையும் படைத்து, அப்படைத்தவை நின்று நிலவச் செய்து, அங்ஙனம் நின்றவற்றை ஒடுக்குமாற்றால் உயிர்களின் துயரத்தைத் தீர்த்தருளும் தோற்றத்தை உடையவன். இத்தொழில்களைச் செய்தற்கண், தான் எத்தகைய மாறுதலும் எய்துதல் இன்றி, எளிதற் செய்வன். தன்னியன் வேறாய் நிற்பதொரு பொருள் இன்றி, எவற்றையும் தன் வயப்படுத்தி நிற்பன். ஈசன் என்பது அவன்றன்.

மணிமேகலை பௌத்த சமயத்தை கருப்பொருளாகக்கொண்டு, சிறபுப் பெயர் (1) - என்பவை அவை.

அச்சமயத்தைப் பரப்பும் குறிக்கோளுடன் இயற்றப்பட்டதாகலின் அதைக் கொண்டு சிவநெறியின் கடவுட் கொள்கையை ஒரு சிறிதே நம்மால் அறிய முடிகிறது. அக்காலத்து, பிருகற்பதி செய்த உலகாயதம், புத்தன் வகுத்த பௌத்தம் -, கபிலன் இயற்றிய சாங்கியம், அக்கபாதன் ஆக்கிய நையாயிகம், கணாதன் கண்ட வைசேடிகம், சைமினி, தந்த மீமாஞ்ம் என்னும் ஆறு மதங்களும், பிரமவாதம், வைணவவாதம் -, வேதவாதம், ஆசிவகவாதம்; நிகண்டவாதம், பூதவாதம் என்னும் ஆறு வாதங்களும் பிரசாரத்தில் இருந்தன.

[1. இக்குக் கலை என்பது பலவகைக் கலை ஞானங்களை அல்லது 38 கலைகளைக் குறித்தல் வேண்டும். ''ஐயா, நதன்மிசை எட்டுத்தலையிட்டமையில் வான்கலை மெய்யுடன் பொருந்தி'' **என்னும்** பேராசிரியர் மொழி காண்க. (திருச்சிற்றம்பலக் கோவையார் உரை).

2. சமயக் கணக்கர் தந்திறங் கேட்ட காதை 86-95.

3. அடிகள் காலம் 3-ம் நூற்றண்டென்பது பலர் ஒப்பமுடிந்த முடிபாக இருத்தலும் ஏணைய சமய குரவர் மூவர்க்கும் முற்பட்டவர் என்பது மாபாதலும், புராண வரலாறுகளுக்கு ஒத்ததாதலும் கருதி இங்கு இவ்வறு எழுதப்படுகின்றது. மேலும் இங்கு விரித்து உரைக்கப்படும் சூழ்நிலை திருவண்டப் பகுதி 68-95 அடிகளிலும், போற்றித் திருவகவல் 41-58 அடிகளிலும் விளங்குதல் காண்க.]

**திருவாசகத் தோற்றம்** - இத்தகைய மதங்கள் பலவும் தோன்றித் தெய்வக் கொள்கையுடைய மக்களை ஒரு நிலைப்படவிடாமல் அலைத்த காலத்தில், திருவாதவூர் அடிகள் எனப்படும் மாணிக்கவாசக சுவாமிகள் திருவவதாரம் உளதாயிற்று மான் கணம் பேய்த்தேரை நீரென்று எண்ணிப் பின்சென்று இளைத்தல் போல, வீடு பேற்றில் அவரவுள்ள மக்கள் தக்க நூல்களும் நெறி உணர்த்துவாரும் இன்மையின், மேற்கூறியவாறு அறுவகைப்பட நின்ற சமயக் கொள்கைகளை மேலும் மேலும் வருத்திக் கற்றுத் தாம் விரும்பிய இன்பத்தைப் பெறாமல் துன்பம் உழந்தனர். அந்நிலையில், இறைவன் கருணை மழை பொழியும் முகிலெனத் திருப்பெருந்துறையில் தோன்றி, அடிகளை ஆட்கொண்டருளிப் பரமானந்தப் பெரும்பயனைத் தந்தருளினான்.

இறைவன் தந்தருளிய பரமானந்தப்பயனை அடிகள், தூய திருவாய் மலராற் சொற்செய்து, திருவாசக மழையாகப் பொழித்தார். அம்மழை தோண்ட உழவர் அருச்சனை வயலுள் அன்பு வித்திட்டுச் சிவம் என்னும் மென்முளை தோற்றிப் பணைத்தோங்கி இருவினையின் களைகடியக் கதிர்பரப்பி முடிவிலாத சிவபோகம் முதிரச் செய்து ஆரத் தந்தது. அடிகள் தில்லையம்பதியில் வீற்றிருந்த போது, திருச்சிற்றம்பலம் உடையார் அந்தணராய்த் தோன்றி, ‘‘பாவை பாடிய வாயாற் கோவை பாடுக’’ என, திருச்சிற்றம்பலக் கோவையாரைப் பாடியருளினர். திருச்சிற்றம்பலம் உடையார் திருவாசகத்தையும், திருச்சிற்றம்பலக் கோவையையும் மாணிக்கவாசகர் சொல்ல எழுதி, எழுதிய சுவடியைக் கனக சபையில் வைத்து மறைந்தனர். தில்லைவாழ் ஆந்தணர் சுவடியைக் கண்டு, மாணிக்கவாசகரிடம் வந்து அதனைக் காட்டி அதிவிருந்த பாட்டுகளின் பொருளைத் தெரிவித்தருளும்படி வேண்டினர். மாணிக்கவாசகர் அவர்களை உடனழைத்து உட்சென்று, தில்லைத் திருக்கூத்தனைச் சுட்டி, ‘‘இவனே இவற்றின் பொருள்’’ எனச்சொல்லி, அவன் திருவடியில் புக்கு ஒன்றி உடனானார்.

**தேவாரத் தோற்றம்**. - தமிழ் இலக்கிய வரலாற்றில், கி.பி. மூன்றாம் நூற்றாண்டு முதல் கி.பி. ஏழாம் நூற்றாண்டின் முதற்பகுதி வரை உள்ள காலம் இருண்ட காலமாகும். அக்காலத்தில் தமிழக வரலாறு தெளிவுபடுமாறு இல்லை. அரசியல் ஆட்சி தமிழர் அல்லாத களப்பிரர் என்னும் ஒருவகையாரிடத்து இருந்தது. மக்களது உணர்வு நிலை ஆட்சி, வடக்கே தோன்றிப் பின் தெற்கே பரவி வந்த புத்தகம், சமணம் என்னும் மதங்களைச் சார்ந்த துறவிகள் வயப்பட்டிருந்தது. அக்காலத்தில் இருந்த அத்துறவிகள் செல்வாக்கை இஞ்ஞான்று இலங்கையிலும் பர்மாவிலும் உள்ள புத்த பிக்குகளின் செல்வாக்குக்கு ஒப்பிடலாம். அதனால் தமிழ் மொழி, நாகரிகம், பண்பாடு, கலை, மெய்ந்நெறி என்பவை விளக்கமும் வளர்ச்சியும் இன்றிப் பேரிடர் எய்தின.

இந்நிலையில், தமிழ் நன்மக்களது சமய வாழ்வு, சமுதாய வாழ்வு, இலக்கியம் என்பவற்றில் பெரியதொரு சீர்திருத்தத்தையும், விழிப்பையும், மறு மலர்ச்சியையும் உண்டு பண்ணிய பெரு மக்களே திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர் என்னும் அருட் பேராசிரியர் இருவரும்.

இவ்வாசிரியர்கள் திருவருள் உண்மையை மக்கள் தெளியுமாறு உணர்த்தினர். திருக்கோயில் வழிபாட்டை வலியுறுத்தினர். தமது அருள்வாழ்க்கையாலும், கடவுள் அனுபவம் பொதித்த, அதியற்புத சின்மயப் பாடல்களாலும், திருநெறி எனப்படும் சிவநெறியைத் தமிழ் மக்கள் அனைவரும் பின்பற்றி ஒழுகுமாறு செய்தனர். சமண சமயம் சார்ந்து அதனை வளர்த்து வந்த பல்லவப் பேராசனாகிய மகேந்திர்வர்மன் திருநாவுக்கரசராலும், கூன் பாண்டிய என்னும் பாண்டிய மன்னன் திருஞானசம்பந்தராலும் சைவர் ஆயினர். இவர்கள் காலம் ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதி ஆகும்.

இவ்வருட் பேராசிரியர்கள் அருளிச்செய்த திருப்பதிகங்கள் உயர்ஞானத்தையும் கடவுள் மெய்யபையும் ஒருங்கே அளிப்பவை. அவற்றை அவ்வாசிரியர்கள், திருவருள் ஆணையாற்றால், மூல இலக்கியங்களாகவும், கைகண்ட மந்திரங்களாகவும் மக்களுக்கு உதவி, அவற்றைப் பின்பற்றி ஒழுகுமாறும் பணித்துள்ளார்கள். ஆதலின், அவை அவர்கள் காலம் முதலாகவே தமிழ்மறை எனவும், திருநெறித்தமிழ் எனவும் வழங்கப்பெற்று வருகின்றன.

இவ்விரு பேராசிரியர்களுக்குப் பின், ஒன்பதாம் நூற்றாண்டில் தோன்றியவர் சுந்தரமூர்த்தி நாயனார் எனப்படும் நம்பு ஆரூரர். இவர் இறைவனால் தடுத்தாட்கொள்ளப்பெற்று, மேலே கூறிய இரண்டு ஆசிரியர்கள் போலவே, திருவருள் நெறிநின்று சிவத் தலங்கள் தோறும் சென்று இன்னிசைத் திருப்பதிகங்கள் பாடியருளினார். பெரிய புராணத்திற்கு மூலமாகிய திருத்தொண்டத் தொகை எனப்படும் திருப்பதிகம் இவர் அருளிச் செய்ததே ஆகும்.

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், நம்பி ஆரூரர் என்னும் இம்மூவர்களும் அருளிச்செய்த திருப்பதிகங்கள் தேவாரம் எனவும், மூவர் தமிழ் எனவும் வழங்கப்படும்.

இம்மூவர்களோடும் மாணிக்கவாசகரையும் சேர்த்து நால்வர் எனவும், சமய குரவர் எனவும், சைவ சமயாசிரியர் எனவும் வழங்குவது மரபு.

இந்நால்வர்களால் அருளிச்செய்யப்பெற்ற தேவார திருவாசகங்கள் தமிழ் மறைகள் எனப்படும். யாழ்ப்பாணம் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாலவர் அவர்கள், இவை “வேதத்தின் ஞான காண்டப் பொருளைச் சிவாகமத்துக்கு மாறுபடா வண்ணம்

உள்ளபடி அறிவிக்கும் தமிழ் வேதம்'' எனத் தமது சைவ வினாவிடையில் எழுதியுள்ளார்கள்.

திருமூலர் அருளிச் செய்த தமிழ் மூவாயிரம் எனப்படும். திருமந்திர மாலை, தேவார காலத்துக்கு முற்பட்டது. காரைக்கால் அம்மையார், கோச் செங்கட்சோழர், கண்ணப்பர், சண்டேசர் என்னும் உண்மை நாயன்மார்களும் தேவார காலத்துக்கு முற்பட்டவர்கள் ஆவர்.

நம்பி ஆரூரர் காலத்து இருந்தவர் கழறிற்றறிவார் என்னும் சேரமான் பெருமான் நாயனார்.

## திருமுறை வகுப்பு:

நம்பி ஆரூரர் காலத்துகுப் பின் 10 ஆம் நூற்றாண்டின் இறுதியில் இருந்தவர் நம்பி ஆண்டார் நம்பிகள். இவர் இராசராச சோழன் வேண்டு கோளின்படி தேவாரத் திருமுறை ஏடுகளைத் தில்லையில் கண்டெடுத்து, அவற்றை ஏழு திருமுறைகளாக வகுத்தருளினார். பின், அவ்வத் திருப்பதிகத்துக்கு உரிய பண்வகை, கட்டளை வகைகளை ஆராய்ந்து கண்டு குறித்தருளினார். மேலும், திருத் தொண்டத்தொகையில் பாடப் பெற்ற நாயன்மார்களின் வரலாறுகளை, தேவாரம், பிற நூல்கள், வேறு வரலாற்று மூலங்கள் என்பவற்றை ஆராய்ந்து, குற்றமறத் தெளிந்தார். தெளிந்து, திருத்தொண்டத்தொகையின் பொருணிலையைப் பிற்காலத்தோர் விரித்து உணர்ந்து கொள்ளுதற்குச் துணையாகும்படி திருந்தொண்டர் திருவந்தாதி என்னும் பிரபந்தத்தையும் மேலும், ஒன்பது பிரபந்தங்களையும் செய்தருளினார்.

இவர் முதல் இராசேந்திர சோழன் ஆட்சிக்காலத்தும் இருந்த வராகலின், தேவாரங்களோடு ஒத்த திருவருட் பெருமையுள்ள திருவாசகம் முதலிய பிற பாடங்களையும் பிரபந்தங்களையும் ஆராய்ந்து, தேவாரங்களுக்குப் பின் எட்டு, ஒன்பது, பத்து, பதினொன்று ஆம் திருமுறைகள் எனப் பின்வருமாறு வகுத்தருளி, அவையெல்லாமற்றையும் செப்பேட்டுச் சாசனம் செய்வித்தருளினார்.

**திருமுறைகள் அமைப்பு**. - திருஞானசம்பந்தர் அருளிச் செய்த திருப்பதிகங்கள் 1, 2, 3 ஆம் திருமுறைகள்.

திருநாவுக்கரசர் அருளிச் செய்த பண்வகை, திருநேரிசை, திருவிருத்தம் என்பவை 4-ஆம் திருமுறை. அவர் அருளிச்செய்த திருக்குறுந்தொகைத் திருப்பதிகங்கள் 5-ஆம் திருமுறை. அவர் அருளிச்செய்த திருத்தாண்டகங்கள் 6-ஆம் திருமுறை.

நம்பி ஆரூரர் அருளிச்செய்த திருப்பதிகங்கள் 7-ஆம் திருமுறை. இவை ஏழும் சேர்ந்து அடங்கன்முறை எனவும், திரிநெறித் தமிழ் எனவும் வழங்கும்.

இனி, திருவாதவூர் அடிகள் அருளிச் செய்த திருவாசகமும் திருக்கோவையாரும் 8-ஆம் திருமுறை.

திருமாளிகைத் தேவர் முதலிய ஒன்பதின்மர் அருளிச் செய்த திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்பவை 9-ஆம் திருமுறை.

திருமூலர் அருளிச்செய்த திருமந்திரம் மூவாயிரம் 10-ஆம் திருமுறை.

திருவாலவாயுடையார் (சிவபெருமான்) காரைக்காலம்மையார் (பேயார் எனவும்படுவர்), ஐயடிகள் காடவன்கோன் நாயனார், சேரமான் பெருமான் நாயனார், நக்கீர தேவர், கல்லாட தேவர், கபில தேவர், பரண தேவர், இளம் பெருமான் அடிகள், அதிரா வடிகள், பட்டினத்துப் பிள்ளையார், நம்பியாண்டார் நம்பிகள் என்னும் பன்னிருவர் ஆசிரியர் அருளிச் செய்த நாற்பது பிரபந்தங்கள் 11-வது திருமுறை.

## திருத்தொண்டர் புராணம்

பன்னிரண்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில், மகாகவியும் சிவானுபூதிச் செல்வரும் ஆகிய சேக்கிழார் பெருமான் அநபாய சோழன் வேண்டுகோளின்படி, திருவருள்வழிநின்று பாடியருளியது பெரிய புராணம் என வழங்கும் திருத்தொண்டர் புராணம். இது திருத்தொண்டர் தொகையின் பேருரையாய் நின்று நிலவுவது. பொதுவாகப் புராணம் என்பவையெல்லாம் புனைந்துரை எனக்கொள்ளப்படும். ஆனால், இது, கி.பி. 3-ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 9-ஆம் நூற்றாண்டு வரை உள்ள கால எல்லையில், தமிழ் நாட்டின் சமயம், நாகரிகம், பண்பாடு, கலை முதலியவற்றை வரலாற்று முறையில் கற்றுணர வழி செய்யும் வரலாற்று மூலமாகக் (Source of History) கொள்ளப்படும் தனிச் சிறப்பை உடையது.

திருமுறைகளின் வரலாற்றையும், அவற்றின் ஆசிரியர்களின் வரலாறு, உளநிலை என்பவற்றையும், அவற்றின் பொருணிலையையும் உள்ளவாறு உணர்வதற்கு இப்புராணம் இன்றியமையாதது. இது ‘‘தோடுடைய செவியன்’’ என்னும் திருநெறி தமிழோடு ஒத்த அருட்பெருமாண்புடையது எனக் கண்டு, சிவானுபூதிச் செல்வர்கள் இதனை ஏனைய பதினொரு திருமுறைகளோடு சேர்த்துப் பன்னிரண்டாம் திருமுறையாக வகுத்துத் திருமுறைகளின் எண்ணிக்கையை முற்றுவித்தனர்.

இதனால், புறவிருள் நீக்கிப் பொருள்களைக் காட்டும் ஞாயிரு பன்னிருவகைப்பட்டாற்போல, அகவிருள் நீக்கி மெய்ப்பொருளைத் தெளிவிக்கும் திருமுறைகளும் பன்னிரண்டு வகைப்பட்டன.

இப்பனிரு திருமுறைகளே சிவநெறிக்குத் தலையாய பிரமாண நூல்களாய இலக்கியங்கள் ஆகும்.

## சைவ சாத்திரங்கள்

சைவ சமயத்தில் கொள்ளப்படும் அடிப்படை உண்மைகளையும் கொள்கைகளையும் முறைப்படுத்தி உணர்த்தும் நூல்கள் சைவ சாத்திரங்கள் எனப்படும்.

சைவ சாத்திரங்களுள் ஆதித்தமிழ் முதல் நூலாக நிலவுவது பத்தாந் திருமுறை என வகுக்கப்பட்ட திருமந்திர மாலையே ஆகும், ஆயினும், பிற்காலத்து வேறு வேறு கொள்கைகளும் முடிபுகளும் பற்பல சமயத்தவர்களால், தமிழகத்தே பிரசாரம் செய்யப்பட்டமையின், அவற்றால் மக்கள் மயங்காதிருத்தற் பொருட்டு சிவானுபூதிச் செல்வர் தம்தம் காலநிலைக்கு ஏற்றபடி அருளிச் செய்த நூல்கள் பதினாங்கு உளவாயின. அவை (1) திருவுந்தியார், (2) திருக்களிற்றுப்படியார், (3) சிவஞானபோதம், (4) சிவஞானசித்தியார், (5) இருபாவிருப·து (6) உண்மை விளக்கம் (7) சிவப்பிரகாசம் (8) திருவருட்பயன் (9) வினாவெண்பா (10) போற்றிப் ப·றொடை (11) உண்மை நெறி விளக்கம் (12) கொடிக்கவி, (13) நெஞ்சு விடுதூது, (14) சங்கற்பநிராகரணம் என்பவை ஆகும். இவற்றை அச்சிவானுபூதிச் செல்வர் முன்னர்த் தம் மாணாக்கர்களுக்கு உணர்த்திப் பின்னர் அவ்வாறே வழி வழியாக ஞான பரம்பரையில் உபதேச நூல்களாக நிலைபெறும்படி வைத்தார்கள். இப்பதினான்கு நூல்களும் மெய்கண்ட நூல்கள் எனவும், சைவ சித்தாந்த சாத்திரங்கள் எனவும் வழங்கி வருகின்றன.

இவற்றுள் முதல் இரண்டு நூல்களும் 12-ஆம் நூற்றாண்டில் தோன்றியவை. சிவநெறியில் உணர்த்தப்படும் மெய்யுணர்வு நெறியை மரபு அளவில் விளக்குவன. பிற சமய நோக்குப்பற்றி எழும் தருக்கி வாதங்களும் வினாவிடைகளும் இவற்றில் இல்லை.

சிவஞான போதம் முதலிய பிற நூல்கள் 13, 14 -ஆம் நூற்றாண்டில் தோன்றியவை. பெரும்பான்மைபற்றிக் கூறின், இவை சுபக்கம் (தன் கொள்கை) கூறும் ஓதும், பரபக்க நோக்கு (பிற கொள்கைகளை மறுக்கும் கருத்து) உடையவையாகவே இயற்றப் பெற்றவை. அதாவது, இவை சைவத்துட் கொள்ளப்படும் ஒழுக்க நெறி, அறிவு நெறி, அன்பு நெறி என்பவற்றை முறைப்படுத்தி

விளக்கும்போது, அவற்றைப்பற்றிப் பிறர் கூறும் பொருந்தாக் கொள்கைகளைக் குறிப்பித்து மறுப்பனவாகவும் அமைந்துள்ளன.

இனி, இச்சாத்திரங்களின் அமைப்புப் பற்றியும் பொருணிலை பற்றியும் சுருக்கமாகச் சில தெரிந்து கொள்வோமாக.

(1) **திருவுந்தியார்** - இந்நூல் 45 கலித்தாழிசைகளால் ஆகியது. இதனை அருளிச் செய்தவர் திருவியலூர் உய்யவந்த தேவநாயனார். அவர் இதனைக் கி.பி. 1147-ல் அருளிச் செய்தார் என்ப.

இதன்கண் கூறப்படும் பொருள்: மனமொழிகளுக்கு அப்பாற்பட்ட முதல்வனே ஞானாசிரியனய் வெளிப்பட்டு மெய்யுணர்வை நல்குவன். அது கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை - என்னும் நான்கு திறத்தால் உணரப்படும். அவ்வாறு உணர்ந்தார் சிவமே ஆவர். சிவமாந்தன்மைப் பெருவாழ்வு முதல்வன் அருள வருவது என்று உணர்தல் வேண்டும். கேட்டல் ஞானம் அனுபவ ஞானமாய் முதிர்வதற்கு ஆதாரயோகம், நிராதாரயோகம் என்னும் இருவகையோகப் பயிற்சியும் வேண்டத்தக்கவை. மெய்யுணர்வின் பயனாக, யான் எனது என்னும் செருக்கு நீங்கும்படி கரைகடந்து எழும் போன்பு ஒன்றால்தான் சிவமாந்தன்மையை முதல்வன் வழங்கப்பெற்று, இன்புறு நிலையை எய்துதல் கூடும். இந்நூல் உலகத்தார் அனைவர்க்கும் மலக்ஷயம் (பாச நீக்கம்) செய்யவல்லது. இத்தகைய பல அரிய பேருண்மைகள் இனிய, எளிய பழகு தமிழில் இந்நூலுட் கூறப்படுகின்றன.

இந்நூலின்கண் உள்ள பின்வரும் கலித்தாழிசைகள் இதன் பொருள் விழுப்பம் உணர்வதற்குத் துணை செய்யும் -

அகளமாய் யாரும் அறிவரி தப்பொருள்
சகளமாய் வந்ததென் றுந்தீபற;
கானாகத் தந்ததென் றுந்தீபற;

உள்ளம் உருகில் உடனாவர் அல்லது
தெள்ள அரியரென் றுந்தீபற
சிற்பரச் செல்வரென் றுந்தீபற.

அவனிவன் ஆன(து) அவனருளால் அல்ல(து)
இவனவன் ஆகானென் றுந்தீபற
என்றும் இவனேயென் றுந்தீபற.

வையம் முழுதும் மலக்கயங் கண்டிடும்
உய்யவந் தானுரை உந்தீபற

உண்மை யுணர்ந்தாரென் றுந்தீபற.

(2) **திருக்களிற்றுப்படியார்.** - இது திருவுந்தியாரின் வழி நூலாகும். அதன் உட்கருத்தைச் சிறிது விரித்து விளக்குவது. இது நூறு திருவெண்பாக்களாலாயது.

திருவுந்தியார் அருளிச்செய்த உய்யவந்த தேவநாயனாருடைய மாணாக்கர் ஆளுடைய தேவநாயனார். அவர் மாணாக்கர் திருக்கடவூர் உய்ய வந்த தேவநாயனார். இவரே இந்நூலைக் கி.பி. 1177-ல் அருளிச் செய்தவர்.

இந்நாயனார் இந்நூலை ஆக்கிய பின் தில்லையம்பலஞ்சென்று கூத்தப்பெருமானை வணங்கி நின்று, இதனை அப்பெருமான் திருமுன்பு திருக்களிற்றுப்படியின்மேல் வைத்தார். அப்போது கூத்தப்பெருமான் திருவருளால் கல்லால் இயன்ற திருக்களிற்றுக்கை நிமிர்ந்து இந்நூலை வாங்கி்பி பெருமானது எடுத்த பொற்பாதத்தில் இட்டது. இக்காரணத்தால் இது திருக்களிற்றுப்படியார் எனப் பெயர் பெறுவதாயிற்று.

இந்நூல் ‘‘உபநிடதம் பிரமம் சூத்திரம், பகவத்கீதை’’ என்னும் மூன்றுமே முதன்மையான பிரமாண நூல்கள் எனக்கூறி அக்கொள்கையை அடிப்படையாகக்கொண்டு, மாறுபட்ட வேறு வேறு கொள்கைகளை மக்களிடைப் பரப்பிய மதாசாரியர் பிரசாரங்கள் தமிழ் நன்மக்களிடையே செல்வாக்குப் பெறாத காலத்தில் இயற்றப்பட்டது என்பது இதனை உற்று நோக்குவோர்க்கு விளங்க கூடிய உண்மை. இதன்கண் விளக்கப்படும் சிவானுபவப் பயன்களுக்குத் திருக்குறள், திருமுறை என்னும் தமிழ் மறை மேற்கோள்கள் காட்டப்படுகின்றன். இறைவன் அடி கூடுதற்குரிய சாதங்களைச் சிவதன்மம், சிவயோகம், சிவஞானம் என மூன்றாக வகைப்படுத்தி இந்நூல் கூறுகின்றது. இவ்வாறு கூறுதல் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் அருளிச் செய்துள்ள சிவபுரத் திருப்பதிகத்துக் கூறப்படுவதோடு ஒத்திருத்தல் கருதத்தக்கது. உண்மை நாயன்மார் செயல்களை உள்ளவாறு உணர வேண்டின், அவற்றை மெல்வினை (விதி மார்க்கத்தின் பாற் படுபவை), வல்வினை (பக்தி மார்க்கத்தின் பாற்பட்டவை) எனப் பிரித்து வைத்து உணர வேண்டும் என்னும் விளக்கம் இந்நூலாற் பெறப்படுகின்றது.

‘‘சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் என்றமையால்
சார்புணர்தல் தானே தியானமுமாம் - சார்பு
கெடவொழுகின் நல்ல சமாதியுமாம் கேதப்
படவருவ தில்லைவினைப் பற்று.’’

‘‘வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை என்றமையால்
வேண்டினஃ தொன்றுமே வேண்டுவது வேண்டினது

> வேண்டாமை வேண்டவரு மென்றமையால் வேண்டிடுக
> வேண்டாமை வேண்டும்வன் பால். ''

என்பவை இந்நூலாசிரியர் திருக்குறளைப் பொதுமறையாகக் கொண்டமையைக் காட்டும்.

முதல்வனுக்கும் உயிர்க்கும் உள்ள பிரிப்பில் சம்பந்தத்தை மகா வாக்கியப் பொருள் உணர்த்து முகத்தால் இந்நூல் 85, 86 - ஆம் திருவெண்பாக்களால் விளக்குகின்றது. இச்சம்பந்தமே உபநிடதங்களில் அத்வைதம் என்ற சொல்லால் உணர்த்தப்படும். இதனை இந்நூல் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் அருளிச் செய்துள்ள ''ஈறாய் முதலொன்றாய்'' எனத் தொடங்கும் திருவீழிமிழலைத் திருப்பதிகங்காட்டி விளக்குதல் தேவாரம் முதலிய அருணூல்களின் உயர்வைச் சில்வாழ்நான்பல்பிணிச் சிற்றறிவுள்ள மக்கள் உணர்ந்து உய்தி பெறுவதற்குக் கருவியாக உள்ளது இன்னும் இதன்கண்,

> ''நங்கையினால் நாமனைத்தும் செய்தாற்போல் நாடனைத்தும்
> நங்கையினாற் செய்தளிக்கும் நாயகனும்''

> ''அன்பேயென் அன்பேயென் றென்பால் அழுதாற்றி
> அன்பே அன்பாக அறிவழியும் - அன்பன்றித்
> தீர்த்தம் தியானம் சிவார்ச்சனைகள் செய்வதெல்லாம்
> சாற்றும் பழமன்றே தான். - ''

> ''கடல் அலைத்தே ஆடுதற்குக் கைவந்து நின்றும்
> கடலளக்க வாராதாற் போலப் - படியில்
> அருத்திகசெய்த அன்பரைவந் தாண்டதுவெளம் எல்லாம்
> கருத்துக்குச் சேயனாய்க் காண்க''

என்றாற்போல் வரும் பாட்டுக்களெல்லாம், மிகவுயர்ந்த முடிநிலை உண்மைகளை எளிதற் பெறவைப்பவை

உற்று நோக்கின், இந்நூல் எழுந்த காலத்து உண்மையனுபவம் ஒன்றே தன்மக்களால் பாராட்டி மேற்கொள்ளப்பட்ட தென்பதும் வீண் தருக்கி வாதங்களிலும், வடமொழி ஆரவாரங்களிலும் மக்கள் மனம் செலுத்தவில்லை என்பதும் தெள்ளிதற் புலனாகும்.

சிவஞான போதம் முதலாகவுள்ள பன்னிரு நூல்களும் எழுதற்குக் காரணமாயிருந்த சூழ்நிலை இதற்கு முற்றிலும் மாறானது. அது பின்னர் விளக்கப்படும்.

(3) **சிவஞானபோதம்** என்னும் ஞான நூலே முன்னும் பின்னும் எழுந்த எல்லா நூல்களுக்கும் தலையாய நூலாக அமைந்தது. இதனை அருளிச் செய்தவர் திருவெண்ணெய்நல்லூர் மெய்கண்ட தேவநாயனார் ஆவர். இவர் காலம் 13-ஆம் நூற்றாண்டின் முற்பகுதி ஆகும்.

இந்நூல் 12 சூத்திரங்களால் ஆயது. கடவுள் வாழ்த்து, அவையடக்கம் என்னும் இரண்டு செய்யுட்களை நூலின் அகத்துறுப்பாகிய பாயிரமாக உடையது. அளவிற் சிறியதாயினும் அறிவு நூல்களின் முடிபெல்லாம் அகப்படுத்துத் தெரிவிப்பது. சித்தாந்த சைவத்தின் அடிப்படை உண்மைகளையும் முடிபையும் 39 தெரிவுகளால் (Propostitions) முறைப்பட அடங்கக்கொண்டு தெளிய உணர்த்துவது வேதாகமங்களின் முடிந்த முடிபை, இந் நூல் ஒன்றாலேயே ஒருவர் உணர்தல்கூடும். இது உண்மை நூல்களின் பொருளிலே, மெய்யுணர்வு, அதனைப் பெறும் வழி, அதன் பயன் என்பனவற்றை அளவை முறையின் வைத்துக் கோவைப்படுத்தி விளக்குவது உண்மையின் இணைப்பு நிலையை (Synthesis of truth) ஒருவன் இந்நூல் சார்பாகத் தலை நின்று உணர்ந்து இன்புறு நிலையைப் பெறலாம்.

இந்நூலின் பொருணிலை பின்வருமாறு உள்ளது -

(அ) **காப்புச்செய்யுள்**:- பல நூல்களைக் கற்பதனால் வரும் குழப்ப உணர்வு நீங்கித் தெளிவுணர்வு பெறுவதற்குக் கல்லால நிழலில் எழுந்தருளியிருந்து அருள்புரியும் சிவபிரான் திருவருள் வேண்டும். விநாயகப் பெருமானை வழிபடுவார்க்கு அத்திருவருள் எனிதிற் கைகூடும்.

(ஆ) **அவையடக்கம்**:- முதற் பொருளைத் தலைப்பட்டு உணரும் உணர்வே னெய்யுணர்வு எனப்படும். அவ்வுணர்வு முதற்கண் உயிரின் இயல்பை முன் உணர்ந்தார்க்கே வாக் கூடியது. உயிராகிய தம் இயல்பை முன் உணர்ந்து பின் தலைவனை உணர்ந்தோர் சிவனோடு ஒப்பர். அத்தகையை உண்மையனுபவம் பெற்றவர் எம்மாற் செய்யப்படும். இச்சிவஞானபோதநூலைப் பொருட்படுத்தாது இரார். நல்லது எனக் கைக்கொள்வர்.

இனி, தம்மியல்பையே உணர மாட்டாத பிறர் எல்லோரும் தலைவன் இயல்பை எங்ஙனம் உணர்வார்? :- அவரெல்லாரும் உண்மையின் ஒவ்வொரு கூறு பற்றிய ஏகதேச உணர்வைக் கொண்டு ஒருவரோடு ஒருவர் முரண்பட்டுப் பலவற்றைக் கூறா நிற்பர். அன்னோர் எம்மையோ, எம்நூலையோ

பொருட்படுத்தாமல் இகழ்ந்து கூறின், யாம் அவர் கூற்றுக்களைப் பொருட்படுத்தோம்.

(இ) **நூல் - முதற்சூத்திரம்**:- உலகம் அவன், அவள், அது எனச் சுட்டி உணரப்படுவது. தோன்றி நின்று மறைந்து, மீளத் தோன்றுவதாய் உள்ளது. ஆதலால், இவ்வுலகை நியமித்து ஒழுங்குபட நடாத்திவரும் முதல்வன் ஒருவன் இருத்தல் வேண்டும். அவன் சுட்டியறியப்படாதவனாய், எவ்வகையான மாறுதலும் இல்லாத செம்பொருளாய், எல்லா உலகையும் ஒருங்கே ஒடுக்கி, ஒருங்கே தோற்றவல்லவனாய் இருத்தல் வேண்டும், உயிர்கள் அறியாமையாகிய இயற்கைக் குற்றம் நீங்கி மெய்யுணர்வைப் படிமுறையில் பெற்று மேம்படுதற் பொருட்டே அம்முதல்வன் உலகப் படைப்பை மேற்கொள்ளுகின்றான். இக்காரணங்களால் முதல்வனை உலகின் பரம ஆதார நிமித்த காரணன் என்று உணர்தல் வேண்டும்.

**இரண்டாம் சூத்திரம்**:- முதல்வன் இவ்வுலகத்திற்கு வேறாக ஓர் உலகத்திலிருந்து கொண்டு இதனை நடத்துகின்றான் என எண்ணுதல் கூடாது. காந்தத்தின்முன் புடை பெயரும் இரும்பு அக்காந்தத்தின் இழுப்பாற்றற்சூழலில் (Magnetic field) அகப்பட்டு நிற்றல்போல, உலகுயிர் அனைத்தும் முதல்வனுடைய அருளாற்றற் சூழலின் அகப்பட்டு, அவன்றன் வியாபகத்தில் அடங்கி நிற்பவை ஆகும். ஆதலால், இந்நிலையில், முதல்வன் உயிர்களோடு கலந்து ஒன்றாய், வேறாய், உடனாய்நின்று, அவை தாம் முற்செய்வினைக்கு ஏற்பத் தொழிற்பட்டு நடக்குமாறு அவற்றைத்தனது ஐந்தொழிலிற் படுத்தி நடத்துவன். அவன் தானும் தன் சத்தியும் எனத் தன்னுள் இருவேறு வகைப்பட நின்று உலகினை நடத்துவன்.

ஞாயிறு தன்னைச் சுற்றும் கோள்களைத் தன் ஈர்ப்பு ஆற்றற் சூழலிலும் பேரொளியிலும் அடங்கக்கொண்டு, அவற்றைத் தோழிற்படுத்துமாறு போல, இறைவன் உலகுயிர்கலைத் தன் அருட்வாட்சியின் அகப்படுத்தி ஐந்தொழிற்படுத்துவன்.

ஞாயிறுபோல முதல்வன் உளன்; அந்நிலையில் முதல்வனை அப்பன், சிவன் எனக் கூறுகின்றோம். ஞாயிற்றின் ஒளியையும் ஈர்ப்பு ஆற்றலையும் போல, அவன்றன் பேராற்றல் உள்ளது அதனை அம்மை, சக்தி, திருவருள் எனக்கூறி வருகின்றோம்.

இவ்வாறு முன் இரண்டு சூத்திரங்கள் கடவுள் இயல்பை அண்டத்தின் வைத்து (காணப்படும் பேருலகைக் காட்டி) உணர்த்துகின்றன. இனி, அடுத்துவரும் சூத்திரங்கள் உயிரின் இயல்பைப் பிண்டம் எனப்படும் நம் உடம்பில் நிகழும் நிகழ்ச்சி பற்றி உணர்த்துகின்றன.

**மூன்றாம் சூத்திரம்**:- உடம்புதோறும் காணப்படும் ஒழுங்குபட்ட அறிவு செயல்களுக்கு மூலமாய், யான் என்னும் உணர்வு வடிவில் விளங்குவதே உயிர் அல்லது ஆன்மா எனப்படும். அதனை யாதோ என ஆராய்ந்த பலர் பலவகைப்படக் கூறியுள்ளனர்:-

(1) அது, இன்னது என அறியவாராமையின், அதனைச் சூனியம் என்றனர் புத்தர், (2) உடபையே யான் என வழங்கி வருதலின், உடம்பே ஆன்மா என்றனர் உலகவாதிகளுள் ஒரு சாரார். (3) அவருள் மற்றொரு சாரார் ஐம் பொறிகளே அறியக் காண்டலின் ஐம்பொறிகளே ஆன்மா என்றனர். (4) உயிர்ப்பு நின்றால் உயிர் இல்லை எனக் கோடலின், உயிர்ப்பாகிய பிராண வாயுவே ஆன்மா என்றனர் ஒரு சாரார். (5) நாம் கண்டவற்றையும் கேட்டவற்றையும் மனத்துக்கொண்டு, சிந்தித்து நிச்சயித்து, இன்பத்துன்ப வேதனைப் படுதலின், அவை அகத்தே நிகழ்வன் ஆதலின், அவ்வாறு சிந்தித்தல், துணிதல், வேதனைப்படல் என்னும் தொழிற்பாடுள்ள உள்ளத்தின் கூறுபாடுகளாகிய அந்தக் கரணங்களே (மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்னும் அகக்கருவிகள்) ஆன்மா என்றனர் வேறொரு சாரார். (6) கனவின்கண் நுண்உடல் கொண்டு நனவிற்போலக்கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறிந்து வருதலின், அதற்குக் காரணமாகவுள்ள நுண்உடம்பே ஆன்மா என்றனர் மற்றொரு சாரார். (7) “பிரஞ் ஞானம் பிரம்ம” என உபநிடதம் கூறலின், சச்சிதானந்த மயமாயுள்ள பிரம்மமே ஆன்மா என்றனர் சங்கரர் முதலாயினார். (8) உடலின் கூறுகள், உளத்தின் கூறுகள் அனைத்தும் ஒருங்குகூடி ஒழுங்குபட இயங்கும்போதே நமக்கு உணர்வு உண்டாகிறது, அல்லாதபோது உணர்வு இல்லை, ஆதலின், அகப்புறக்கருவிகள் அனைத்தின் கூட்டமே ஆன்மா, இவற்றுக்கு வேறாக ஆன்மா என ஒன்றில்லை என்றனர் புத்தரில் ஒரு சாரார்.

இந்த எண்மர் மதங்களில் எழுவர் மதம் மூன்றாம் சூத்திரத்தால் மறுக்கப்பட்டு ஆன்மாவின் உண்மை தெளிவிக்கப்படுகின்றது. அந்தக் கரணங்களே ஆன்மா என்பார் மதம் நான்காம் சூத்திரத்தால் மறுக்கப்படுகிறது.

இனி மூன்றாம் சூத்திரத்தின் பொருள் வருமாறு :-

(1) **ஆன்மா சூனியம் அன்று** : எது ஆன்மா எனப் பல வகையால் ஆராய்ந்து, முடிவில் சூனியமே ஆன்மா எனத் துணியும் போதும், அவ்வாறு துணியும் அறிவு உள்ளது அல்லவா? அவ்வறிவே ஆன்மா என உணர்த்தக்கது.

(2) **பருவுடன் ஆன்மா அன்று** : என் ஊர், என் வீடு, என் மனைவி என ஊர், வீடு, மனைவி, முதலிய உடைமைகளை நமக்கு வேறாக உணர்கிறோம் அல்லவா? அதுபோல, என் கை, என் தலை, என் உடம்பு என இவ்வுடம்பு நமக்கு வேறாக

உணரப்படுகின்றது. ஆதலால், யான் என்னும் உணர்வு வடிவில் விளங்கும் ஆன்மா இவ்வுடம்புக்கு வேறாக உள்ளது.

(3) **ஐம்பொறிகள் ஆன்மா அல்ல** : கண் காணும், ஆனால் கேளாது. செவி கேட்கும் ஆனால் காணாது. இங்ஙனம் ஐம் பொறிகளுள் ஒன்று அறிந்ததனை மற்றொன்று அறிவதில்லை. ஆயின், ஒரு பழக்கதைக்கண்டு, மோந்து, சுவைத்து, நுகரும்போது, போது, கண்டயானே வாங்கினேன், பின் அதனை மோந்தேன், பின் சுவைத்து உண்டேன் - எனச் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகிய ஐம்புலன் உணர்வும் ஒரே அறிவின்கண் இணைந்து தொடர்புற நிகழ்லின், இவ்வாறு அறிவதாகிய ஆன்மா ஐம் பொறிகளுக்கும் வேறாதல் வேண்டும்.

(4) **கனவுடலாகிய நுண்ணுடம்பு ஆன்மா அன்று** : கனவின் கண் கண்டவற்றை நனவின்கண் தெளிய உணரமாட்டாது மயங்கி அரைகுறையாகவும் வேறுபடவும் உணர்கின்றோம். கனவுடம்பே ஆன்மா ஆயின், நனவின்கண் இம் மருட்கை உளதாகாது. நனவில் பருவுடம்பிற்பட்டும், கனவில் நுண்ணுடம் பிற்பட்டும் உணர்தல் பற்றி உடம்பு வேறுபாடு - காண வேறுபாடு - இருத்தலால்தான் ஈரிடத்திலும் அறிவு வேறுபட நிகழ்கின்றது ஆதலின், கனவில் நுண்ணுடம்பைப் பற்றுவதாகவும், நனவில் அதைவிட்டுப் பருவுடம்பைப் பற்றுவதாகவும் உள்ள அறிவு (ஆன்மா) அவை இரண்டிற்கும் வேறேயாம்.

(5) **பிராணவாயு ஆன்மா அன்று** : நனவு, கனவு, உறக்கம் மூன்றிலும் பிராணவாயு ஒரு படித்தாக இயங்குதலைக் காண்கிறோம். நனவில் பருவுடம்பு தொழிற்படுகின்றது. இன்பத்துன்ப நுகர்ச்சியும் உள்ளது. ஆனால் உறக்கத்தில் பருவுடம்பின்கண் தொழிற்பாடும் இன்பத் துன்ப நுகர்ச்சியும் நிகழவில்லை பிராணவாயுவே ஆன்மாவாயின், நனவு, கனவு, உறக்கம் மூன்றிலும், இன்பத்துன்ப நுகர்ச்சியும் தொழிற்பாடும் பருவுடம்பில் ஒரேமாதிரி நிகழவேண்டும். அவ்வாறு நிகழாமையின் பருவுடம்பு கனவுடம்பு, மனம் புத்தி அகங்காரம் என்னும் அகக் கருவிகள் - என்பவற்றுடன் கூடியும் பிரிந்தும் அவத்தைப்படும் ஆன்மா பிராணவாயுவுக்கு வேறேயாம்.

(6) **பிரம்மம் ஆன்மா அன்று** :முதற்பொருளாகிய பரப்பிரம்மம் இயற்கை முற்றுணர்வுடையது. எக்காலத்தும் எல்லாப் பொருள்களையும் ஒரு படித்தாக அறிந்து நிற்பது, ஆயின், உடம்பு தோறும் யான் என நிகழும் உணர்வு உணர்த்த உணரும் செயற்கைச் சிற்றறிவாக உள்ளது. இது உடம்பில் உள்ள கருவிகளால் அறிவு விளக்கம் பெறுவது. நனவு நிலையிலும் நூல், ஆசிரியன், உடன்பயில்வோர், உலக அனுபவம் - என்னும் உதவிகளால் படிமுறையில் ஐயமும் மருட்கையும் நீங்கி அறிவு வளரப் பெறுவது. ஆதலால், பரப்பிரம்மத்திற்கு வேறாக அதன் உதவியைப் பெறுவதே ஆன்மா என்பதே உண்மை நூல்களின் துணிபு.

(7) உடம்பு முதலாகவுள்ள கருவிகளின் கூட்டமே ஆன்மா என்றலும் பொருந்துவதன்று. அக் கருவிகளெல்லாம் கலைமுதலாக நிலம் வரை முப்பத்தொரு பெயர்பெறும். அவற்றைத் தொகுத்துக் காணும்போதும் பருவுடம்பு, நுண்ணுடம்பு, பரவுடம்பு எனப் பெயர் பெறுவதன்றி ஆன்மா எனப் பெயர் பெறுவதில்லை. ஆதலின் "இது" எனச் சுட்டப்படும் பொருள்கள் அனைத்திற்கும் வேறாய், அவ்வாரு பிற பொருள்கலைச் சுட்டி உணர்ந்து பற்றியும், 'இது நான் அன்று' என அவற்றின் நீங்கியும் அவத்தைப்பட்டு வரும் உணர்வே ஆன்மா. அது கண்ணுக்குக் கண்ணாடி போல நின்று உதவும் மாயா காரியமாகிய பொருள்களுள் ஒன்றும் அன்று முதல்வன் மாயையைக் கடந்து நிற்பவன் ஆதலின் முதல்வன் ஆதலும் இன்று மாயா காரியத்திற்கும் முதல்வனுக்கும் வேறாய் அவ்விரண்டாலும் பயன் கொள்ளவும் மூன்றாவது பொருளாம்.

ஊன்றி நோக்கின், நியாயம், வைசேடிகம், சாங்கியம், யோகம், மீமாஞ்சை, வேதாந்தம் என்னும் ஆறு தரிசனங்களிலும், உலகாயதம், பௌத்தம், சமணம், என்னும் புறச்சமயங்களிலும், கூறப்படும், பதார்த்த நியமனம் எல்லாம் இதுகாறும் சுருக்கமாக விளக்கப்பட்ட மூன்று சூத்திரப் பொருள் நிலையில் அடங்கி மறுப்புண்டு போதல் விளங்கும்.

**நான்காம் சூத்திரம்** :-

உயிர்க்கு நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்கல் என்னும் ஐந்து உணர்வு நிலைகள் அன்றாட்ம் முறையே ஏறுவரிசையிலும், பின் இறங்கு வரிசையிலும் காண்கிறோம். ஏறு வரிசையில், உணர்வு (Objective consciousness) மேன் மேலும் விளக்கமுற்று வருதலும், இறங்கு வரிசையில் அவ்வுணர்வு மங்கி அறியாமை மேம்பாட்டு நிகழ்தலும் நம் அனுபவமாக உள்ளன. ஆதலினால், உயிர்க்கு அறியாமையை விளைப்பதாக இயற்கை மலம் ஒன்று உண்டென்பது உணரப்படும். மனம், புத்தி, அகங்காரம், சித்தம், என்னும் அகக்கரணங்கள் அவ்வறியாமையை விலக்கி உலகப் பொருள்களை உணர்ந்து தக்கபடி எதிர் இசைவு புரிய (Respond) உதவுகின்றன என்பதும் உணரப்படும்.

இங்குக் காட்டிய அனுபவம் பற்றி மேலும் தற்சோதனை (Introspection) உள்நோக்கு நெறியில் நின்று நோக்கின், உயிர்க்கு மூன்று அடிப்படை உணர்வு நிலைகள் உள்ளன என்பது விளங்கும். அவை கேவலம், சகலம், சுத்தம் எனப்படும். கேவலம் அறியாமையில் அழுந்தும் நிலை. இது நூல்களில் இரவு எனப்படும். சகலம் உலகப் பொருள்களின் தன்மையில் அழுந்தும் நிலை இது பகல் எனப்படும். சுத்தம் முதல்வன் திருவருளில் அழுந்தும் நிலை இதுவே நூல்களில் இராப் பகலற்ற இடம் எனப்படும். கேவலத்திலிருந்து சகலத்தைத் தலைப்படும் நெறியில் மேலே காட்டிய உயிர்ப்படக்கம். பேருறக்கம், உறக்கம், கனவு, நனவு என்னும் ஐந்து ஆக்க

நிலைகளும், சுத்தத்தில் ஐந்து ஆக்க நிலைகளும் உள்ளன. தன்னை உணரப்புகுபவர் இந்நிலைகளையெல்லாம் சகலத்தில் நின்று முன்னும் பின்னும் கூட்டி உணர்தல் வேண்டும்.

**ஐந்தாம் சூத்திரம்**. - மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறுகளும் தத்தமக்குரிய ஊறு, சுவை, உரு, நாற்றம், ஓசை என்பவற்றை அறியும் போது மேலே சொல்லிய உயிரால் செலுத்தப்பட்டே அறியும். ஆயினும் அவை புறநோக்கு ஒன்றே உடையவை ஆதலால், தம்மையும் அறிவதில்லை, தம்மைச் செலுத்திநிற்கும் உயிரையும் அறிவதில்லை. இவற்றைப் போன்ற இயல்பு தான் உயிர்களாகிய நமக்கு உள்ளது. உயிர் ஒரு பொருள் அறியும் போதும், ஒரு செயலைச் செய்யும்போதும், முதல்வனால் அறிவிக்கப் பெற்றும், செலுத்தப் பெற்றும் தான், அறிகிறது, செய்கிறது. ஆயினும், அது பொருள் நோக்கு (Objective consciousness) உடையதாகவே இருத்தலின், தன்னையும், அறிவதில்லை, தன் உணர்வின் முதலாக இருந்து தொழிற்படுத்தும் முதல்வனையும் அறிவதில்லை காந்தம் தான் அசைவின்றி இருந்தே, இரும்பினைத் தன் ஆற்றலால் இயக்குமாறு போல, இறைவன் உயிர்களைத் தொழிற்படுத்துகின்றான். ஆதலின், அவன் எல்லாவுயிர்களுக்கும் உபகரிப்பவனாக இருந்தும் தான் சிறிதும் விகாரப்படுவதில்லை.

**ஆறாம் சூத்திரம்**. - முதல்வன் நம் அறிவால் அறியப்படுபவனா? அல்லனா? அறியப்படுபவன் என்றால், அறியப்படும் பொருள்களெல்லாம் அறிவில் பொருள்களாகவும் அழிவனவாகவும் இருத்தலின், முதல்வனும் அறிவில் பொருளாய், அழியும் பொருளாய் முடிவான். எவ்வாற்றாலும் அறியப்படாதவனே ஆவன் எனின், நம் உணர்வில் தட்டாத பொருளால் நமக்கு எந்தப் பயனும் உளதாகாது. அவனை இல்பொருள் என்றே கொள்ள நேரும். இங்ஙனமாகலின், அவன் நம் சுட்டறிவுக்கு அப்பாற்பட்டவன் எனவும், பாசங்களினீங்கிச் சுட்டாது ஒற்றித்து நின்று உணரும் அனுபவ உணர்வுக்கு விடயமாகுவன் எனவும் கொள்ளுதலே பொருத்தம் ஆகும். இதனால், அவன் சித்தாகவும், உள் பொருளாகவும் இருப்பவன் என்பதையும் உணரலாம். எனவே முதல்வனைச் சிவசத்து எனக் கூறலாம். சிவம்-சித்து, சிவ சத்து, சித்துச்சத்து, அறிவு வடிவாய் உள்ள செம்பொருள்.

**ஏழாம் சூத்திரம்**. - நம் உடம்பு, உடம்பின்கண் அமைந்துள்ள் கருவிகள், உலகு, நுகர்ச்சிப் பொருள் எல்லாம் தோன்றி நின்று அழிவன ஆதலின் அசத்து எனப்படும். செம்பொருளாகிய முதல்வன் சத்தென்படுவன். பிறப்பு நிலையில், நாம் அசத்தாகிய பொருள்களை அசத்தாகிய கரணங்களைக்கொன்டு அறிந்து, அவ்அசத்தின் வண்ணமாய் இருந்து வருகின்றோம், வீட்டு நிலையில் சத்தாகிய செம்பொருளை, அதன் திருவருளால் உணர்ந்து, அதன் வண்ணமாய் இருப்போம்.

இதனால் இரு திறனையும், இரு திறனாலும் அறிந்து, இருதிறனின் கண்ணும் உள்ளதாய் விளங்கும் இயல்பே ஆன்மாவின் சிறப்பியல்பு என்பது உணரப்படும். இவ்வியல்பு காரணமாகப் பிறப்பின்கண் உயிர் இவ்வுடம்பே யான் என்னும் அனுபவம் உடையதாய் வருவது போலவே, வீட்டினிகண்யான் பிரம்மம் (அஹம்பிரஹ்மாஸ்மி) என்னும் அனுபவம் உடையதாய் இருக்கும். அதுபற்றி ‘‘முதற்பொருள் என வேறில்லை, ஆன்மாவே முதற் பொருள்’’ என முடிவு கூறுதல் சரியன்று. ஆன்மா அசத்தைச் சார்ந்து அசத்தாயும், பின்சத்தைச் சார்ந்து அவ்வசத்தை நீங்கிச் சத்தாயும் நிற்கும் இக் காரணம் பற்றிச் சைவத்தில் ஆன்மா ‘‘சதசத்து’’ எனப்படும்.

**எட்டாம் சூத்திரம்**. - முன் முன் பிறவிகளில் பயன் கருதாது செய்துவந்த சரியை கிரியை யோகங்களாகிய தவமுதிச்சியினால், உயிக்குயிராக இருந்து உணர்த்திவரும் முதல்வன் ஞானாசிரியனாகத் தோன்றி மெய்யுணர்வை அளித்தருளுவன், மன்னவன் மகன் வேடர் இடத்தே தங்கித் தன் பெருந்தன்மையை மறந்து வாழ்வதுபோல், சிவாநந்தப் பெருஞ்செல்வத்தைப்பெற்று வாழ்வதற்குரிய சிவகுமாரனாகிய உயிர் ஐம்பொறிகள் முதலிய தத்துவக்கூட்டங்களுடன் சேர்ந்து தன் பெருந்தன்மையையும் அறியாது பிறப்பிறப்புட்பட்டு உழலும் இவ்வுண்மையை ஞானாசிரியன் பக்குவ முதிர்ச்சியுள்ள உயிர்க்கு உணர்த்தியருளுவன். இவ்வுண்மையைக் கேட்டவுடன் உயிர் தத்துவக் கூட்டங்களினின்றும் நீங்கி முதல்வன் திருவடியில் பிரிப்பின்றி ஒன்றி, இன்புறு நிலையை எய்தும். எட்டாஞ் சூத்திரப்பொருள் ‘‘கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர், மற்றீண்டு வாரா நெறி’’ என்னும் திருக்குறளின் விரிவுரையாக அமைதல் காண்க.

**ஒன்பதாம் சூத்திரம்**. - அசத்தாகிய தத்துவங்களோடு கூடுவதால் உயிர்க்கு உண்டாகும் சுட்டுணர்வு பாசஞானம் எனப்படும். மூன்றாம் சூத்திரத்துக் கூறியவாறு, ‘‘நான் யார்’’ என உயிர் தன் உண்மையை ஆய்ந்துவரின், அது மாயாகாரியமாகிய கருவி கரணங்களின் தொடர்பு நீங்கித் தன்வியாபக நிலையை உணரும். அவ்வாறு உணரும் நிலையில், பாசம் நீங்கினும் அதன் வாதனை காரணமாகத் தன்னை ‘‘நான் பரம்பொருள்’’ என உணரும். இவ்வுணர்வு பசுஞானம் எனப்படும். பகற் பொழுதில் அளப்பரிய ஆகாயத்தைக் காணலுறும்போது ஆகாயத்தின் அவ்வளப்பரிய விளக்கம் அதன்கண் கலந்து விளங்கும் ஞாயிற்றின் பேரொளி காரணமாக உளதாதல் போல், பாச நீக்கத்தில் உயிர்ன்கண் விளங்கும் வியாபகம் முதல்வன் திருவருள் சார்பு பற்றிய விளக்கமாகும் எனத் தெளிந்து, அத்திருவருள் ஒளியில் ‘‘யான் எனது’’ எவனும் சேருக்கு அற அடங்கி நிற்பின் அவவருளுக்கு முதலாக உள்ள சிவம் பேரின்ப வடிவாய்த் தோன்றி ஆன்மாவைத் தன் வயப்படுத்தி இன்பூட்டும் இவ்வாறு திருவருளே கண்ணாகக் காணும் காட்சியே மெய்யுணர்வு அல்லது சிவஞானம் எனப்படும்.

பாசக்கூட்டம் எல்லாம் கானல்நீர்போல் சடுதியில் தோன்றி மறைவன என, அவற்றைத் தனக்கு வேறாகக் கண்டு பற்றுச் செய்யாது நிற்ப, அவ்வாறு நிற்கும் உயிரின் அறிவின்கண் திருவருள் ஞானம் பிறவி வெப்பத்திற்குத் தண்ணிய நிழல்போல வெளிப்படும். பாசஞானத்தாலும், பசுஞானத்தாலும் பற்ற முடியாத பேரின்ப முதல்வனை அத்திருவருள் ஞானத்தால் தன் அறிவின்கண் ஒருவன் நாடுதல் வேண்டும். இவ்வாறு சிந்தித்துக் காணும் காட்சி சலியாதிருத்திற் பொருட்டு முத்தி பஞ்சாக்கரம் சுத்தமானதமாக எண்ணப்படும். ஒன்பதாஞ் சூத்திரப் பொருள் ''ஓர்த்துள்ளம் உள்ள துணரின் ஒருதலையாப் பேர்த்துள்ள வேண்டா பிறப்பு'' என்னும் திருக்குறளின் விரிவுரையாக அமைதல் காண்க.

**பத்தாம் சூத்திரம்**.- பிறப்பு நிலையில் உயிர்ன் அறிவு செயல்கள் நிகழும்போது முதல்வனும் உடனாகி நின்றே அவ்வாறு நிகழுமாறு பணித்து வருகின்றான். இதனை, 'நாம் எழுதும்போது பேனாவும் கையும் உடனாகி நிற்றலை' உவமையாகக் கொண்டு உணரலாம். இங்ஙனம், முதல்வன் உடனின்றும், உயிர் யான் எனது என்னும் செருக்கோடு முயலும்போது அவன் தன் இருப்பைச் சிறிதும் அவ்வுயிர்க்குக் காட்டாது, தான் பின் நின்று அதன் வழியிலே அதனைச் செல்லுமாறு ஏவி விடுகின்றான். அதனால், உயிர் முதல்வன் உபகாரத்தை மறந்து செய்யும் செயல்களுக்குத் தானே பொறுப்பு ஆதலில், இருவினை அதைப் பற்றுகின்றது.

இங்ஙனம், பிறப்புநிலையில் முதல்வன் தன்னைக்காட்டாது உயிரின் செயலில் மறைந்து வந்தாற்போல, முதல்வனிருப்பை உணரும் வீட்டு நிலையில், ஆன்மாத்தான் என ஒரு முதல் காணப்படாதபடி எல்லாம் முதல்வன் செயலே என உணர்ந்து அவன் வியாபகத்தில் அடங்கி ஒன்றாகி, அவன் அருளால் அல்லது ஒன்றையும் அறிதலோ செய்தலோ இன்றி அருள் வழி நிற்றல் வேண்டும். இங்ஙனம் முதல்வனோடு ஒன்றாகி நிற்றலால் இயற்கை மலம் எனப்படும். ஆணவத்தின் வாதனை பற்றறக்கழியும். அருள் வழி நிற்றலால் அருளே காட்சிப் பட்டு உலகம் காட்சிப் படாது. அதாவது மாயையின் செயல் பற்றறக் கழியும் ஆதலினால், இரு வினைகளும் ஆன்மாவைப் பற்ற மாட்டா. எல்லாம் முதல்வன் செயலேயாய் முடியும்.

இச்சூத்திரத்தால் குறிக்கப்படும் மெய்யுணர்வுநிலை அருள்நிலை எனப்படும். இதுவே மேலே இராப்பகலற்ற நிலை எனப்பட்ட நான்காம் நிலை. இச்சூத்திரப் பொருள் ''சார்புணர்ந்து சார்புகெட ஒழுகின் மற்றழித்துச் சார்தரா சார்தரு நோய்'' என்னும் அருமைத் திருக்குறளின் அனுபவ விரிவுரையாக அமைதல் கருதத்தக்கது.

**பதினொறாம் சூத்திரம்**. - கண் பொருள்களைக் காணும் இயல்பு உள்ளது. ஆயினும், உயிரின் அறிவு உடனிருந்து செலுத்திக் காட்டினால் அன்றி அதற்குக்

காட்சி நிகழாது. ஆதலினால் பொருள்களைக் கண் காணும்போது உயிர்ன் உதவியைக்கொண்டே காணும்.

இவ்வாறே உயிர் பொருள்களை அறிந்து அவற்றில் அழுந்தி நின்று அனுபவிக்கும் இயல்பும் உள்ளது. முதல்வன் திருவருள். உடன்கலந்து செலுத்திப் பொருள்களைக் காட்டினால் அனறி அது பொருள்களைக் காணாது.

மேலும், கண் பொருள்களைக் காணும்போது உயிரின் அறிவு அதற்குப் பொருள்களைக் காட்டித் தானும் காணும். உயிரின் அறிவுக்குக் காட்சி இல்லையென்றால் கண்ணிற்கும் காட்சி இல்லை தான். இவ்வாறே உயிர் பொருள்களை அறிந்து அனுபவிக்கும் போது, உயிர்க்கு அவ்வனுபவம் நிகழ்தற்பொருட்டு முதல்வன் அவ்வுயிர்க்குப் பொருள்களைக் காட்டித் தானும் அவற்றில் அழுந்தாது காண்பான். இவ்வுபகாரம் முதல்வனால் எல்லாவுயிர்களுக்கும் பிறப்பு வீடு என்னும் இரு நிலைகளிலும் எஞ்ஞான்றும் செய்யப்படுகின்றது. பிறப்பு நிலையில் உயிர்கள் அசத்தாகிய உலகப் பொருள்களைத் தம் அறிவிச்சை செயல்களால் பற்றி விடயித்து இன்பத்துன்ப மயக்கம் என்னும் மூவவகி வேதனைப்படும். வீட்டு நிலையில் முதல்வனையே தம் அறிவு இச்சை செயல்களுக்கு விடயமாகப் பற்றி அழுந்திப் பேரின்பம் துய்க்கும் தாய்ப்பால் அருந்தும் குழவிக்குத் தாய் அதனை எடுத்து அணைத்துத் தன்னிடம் சுரக்கும் பாலை உண்ணக் கொடுத்து உபகரிப்பது போலவே. வீட்டு நிலையில் முதல்வன் உயிர்களுக்கு உபகரிக்கின்றான். இக்கருத்தை மாணிக்கவாசகர், ''தாயாய் முலையைத் தருவானே'' என அருளிச் செய்துள்ளார்.

இவ்வாறு பிறப்பு வீடு இரண்டிலும் முதல்வன் செய்யும் உபகாரத்தை சிவஞானத்தாற் சிவனைக் காணும் சிவஞானிகள் முன் சூத்திரங்களாற் கூறியபடி கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து உணர்வர். அவ்வாறு முதல்வன் உபகாரத்தை உண்மையாக உணர்ந்த மெய்யுணர்வின் பயனாக அவர்களுக்கு இடையறாப் போன்பு சுரைகடந்து எழும். அந்நிலையில், அவ்வன்பே இன்பமாய்ச் சிவம் வெளிப்பட அதன்கண் அழுந்தி அன்பே சிவமாய் அமர்ந்திருப்பார்.

இதுவே பரமுத்தி நிலையில் ஆன்மாச் சிவமாந்தன்மைப் பேரா இயற்கை பெற்று வாழும் நிலை. இது சுத்தத்தின் கண் நிகழும் அதீத நிலை எனவும், இன்புறு நிலை எனவும் கூறப்படும்.

**பன்னிரண்டாம் சூத்திரம்**. - இன்புறு நிலையைத் தலைப்பட்ட பெருமக்கள், முதல்வன் திருவருளால் உந்தப்பட்டும், அன்றிப் பிராரத்த வாதனை காரணமாகவும், சிற்சில சமயங்களில் அந்த நிலையின் நீங்கி உலக முகப்படுவர், அந்நிலையில் மலவாதனை காரணமாக ''யான் எனது'' என்னும் செருக்குத் தம் உணர்வில்

தோன்றாதபடி ஞானநீரால் வாதனை மாசு கழுவுவர். தம்மோடு ஒத்த மெய்யன்பரோடு கூடி நிற்பர். திருக்கோயில்களில் உள்ள திருவுருவங்களையும் திருவேடத்தையும் சிவன் எனவே தெளிய கண்டு தொழாநிற்பர்.

இச்சூத்திரம் அணைந்தோர் தன்மை எனப்படும் சீவன் முத்தர் இயல்பு கூறுவது. இவ்வியல்பைத் திருஞானசம்பந்தர் முதலிய பெருமக்கள் வாழ்க்கை வரலாறுகளில் காணலாம்.

சிவஞான போதம் தலையான ஞான நூலாதல் பற்றி, அதன் பொருளியல் பற்றி இதுகாறும் காணலாம்.

(4) **சிவஞான சித்தியார்** : இது சிவஞானபோதத்தின் வழி நூல். மெய்கண்டதேவர் மாணாக்கர் பல்லோருள்ளும் சிறந்த அருணந்திசிவனார் அருளிச்செய்தது. பரபக்கம், சுபக்கம் என்னும் இரு பெரும் பகுதிகளை உடையது. பரபக்கம் 301 திருவிருத்தங்களால் ஆயது. சிவஞான போத அவையடக்கத்தின் பின்பகுதி "தம்மை உணரார் உணரார், உடங்கியைந்து தம்மித் புணராமை கேளாம்புறன்" என்பது. இப்பகுதியின் விரிவுதான் பரபக்கம்.

பரபக்கத்தில் பின்வரும் சமயங்களின் கொள்கைகளும் அவற்றின் மறுப்பும் முறைப்பட வைத்துக் கூறப்பட்டுள்ளன அவை (1) உலகாயதம் (2) சௌத்திராந்திகம், யோகாசாரம், மாத்துமிகம், வைபாடிகம், என நால்வகைப்படும் பௌத்தம், (3) நிகண்டவாதம் ஆசீவகம் என இருவகைப்படும் சமணம், (4) பட்டாசாரியன் மதம், பிரபாகரன் மதம் என இருவகைப்படும் மீமாஞ்சை (5) சத்தப் பிரமவாதம், கிரீடாப் பிரமவாதம், பாற்கரிய வாதம், மாயாவாதம் என நால்வகைப்படும் ஏகான்ம வாதம், (6) சாங்கியம், (7) பாஞ்சராத்திரம் என்பவை.

சுபக்கம் 328 திருவிருத்தங்களை உடையது. இதன் பொருணிலை சிவஞான போதத்தின் பொருணிலையே ஆகும். இது சிவஞான போதப் பொருளையே விரித்துத் தடைவிடைகளுடன் நிறுவுகின்றது. இந்நூலால் விளையக்கூடிய அநுபவப் பயனைத் திருவுளங்கொண்டு, தருமையாதீன முதறப்பரமாசாரிய சுவாமிகள் ஆகிய குருஞான சம்பந்தர்,

"பாரில் உள்ள நூலெல்லாம் பார்த்தறியச் சித்தியிலே
ஒர் விருத்தப் பாதி போதும்"

என்றருளிச் செய்துள்ளார்.

திராவிட மாபாடிய ஆசிரியர் சிவஞான சுவாமிகள் ''சிவஞான சித்தி சிவாகமார்த்தங்களுக்கெல்லாம் உரையாணி எனச் செய்யப்பட்டு நிலவுவது'' எனக் கூறியுள்ளார்.

''அறியாமை அறிவகற்றி அறிவின் உள்ளே
அறிவுதனை அருளினால் அறியாதே அறிந்து,
குறியாதே குறித்தந்தக் காணங்க ளோடும்
கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாயின்''

என இதன் சுபக்கத்தில் வரும் பாதி விருத்தம் எட்டாம் சூத்திரம், முப்பதாஞ் செய்யுளின் முற்பகுதி பாச நீக்கமும் தெளியும் நிலையும் இனிது விளக்கி, உலகச்சார்பு நீங்குவதற்குரிய வழியைத் துலக்குகிறது.

(5) **இருபாவிருபஃது** : இதுவும் அருணந்தி சிவனாரால் அருளிச் செய்யப்பட்டது. வெண்பா, ஆசிரியப்பா என்னும் இருவகைப்பாக்களால் அந்தாதித் தொடை அமையப் பாடப் பட்டது. இருபது செய்யுட்களாலாயது. மெய்கண்ட தேவரை எதிருமுகமாக்கி வினாவும் முகத்தால் சித்தாந்த அதிநுட்ப உண்மைகளையும் சிவானுபவத்தையும் தெளிவு படுத்துவது.

(6) **உண்மை விளக்கம்** : இது மெய்கண்ட தேவர் மாணாக்கர் திருவதிகை மனவாசகங்கடந்த தேவரால் அருளிச்செய்யப்பட்டது. 53 வெண்பாக்களால் ஆயது. முப்பத்தாறு தத்துவம், ஆணவம், இருவினை, உயிர், இறைவன், இறைவன் திருநடனம், ஐந்தெழுத்தருள் நிலை, பரமுத்தி நிலை, அணைந்தோர்தன்மை என்பனவற்றைச் சுருங்கல் விளங்கல் என்னும் அழகுபடத் தொகுத்துக் கூறுவது. மெய்கண்ட தேவரை மாணக்கர் வினாவ, அவர் விடை கூறி வருவதுபோல வைத்து ஆக்கப்பட்டது. இந்நூல் 'மெய்கண்ட சந்தான அனுபத்திரட்டு' எனச் சிறப்பித்து உரைக்கப்படுவது சைவ சாத்திரங்களைக் கற்று உணர விரும்புவோர் இதனையே முதற்கண் ஓதி உணர்தல் வேண்டும்.

சிவஞான போதம் முதலிய நான்கு நூல்களும் 13-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் இயற்றப்பட்டனவாதல் வேண்டும்.

மெய்கண்ட தேவர் மாணாக்கருள் தலைசிறந்தவர் அருணந்தி சிவனார் என்பது மேலே கூறப்பட்டது. அவர் மாணாக்கர் பலருள்ளும் சிறந்தவர் கடந்தை மறைஞான சம்பந்தர் ஆவார். இவர் நூல் ஒன்றும் செய்த்தாகத் தெரியவில்லை. * [*சதமணிக் கோவை நூலினை இவர் இயற்றியதாக ஆரய்ந்து கூறுவார் உளர்.] இனி, இவர் தம் மாணாக்கர் பல்லோருள்ளும் தலை சிறந்தவர் கொற்றவன்குடி உமாபதி சிவனார் ஆவர். இவரே மெய்கண்ட நூல்களுள் எஞ்சியுள்ள எட்டு நூல்களையும் அருளிச்

செய்தவர். இவருடைய காலம் 13-ஆம் நூற்றாண்டின் இறுதியும், 14-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியும் ஆகும்.

(7) **சிவப்பிரகாசம்** : இது உமாபதி சிவனார் அருளிச்செய்த நூல்களுள் தலைசிறந்தது. சிவஞான போதத்தின் சார்பு நூல் எனப்படும். முதனூலாகிய சிவஞான போதத்திலும் வழிநூலாகிய சிவஞான சித்தியினும் எடுத்தோதாமல் குறிப்பாகக் கூறப்பட்ட பல பொருள்களை இது எடுத்தோதி விளக்குகிறது. பாயிரம், பொதுவதிகாரம், உண்மையதிகாரம் என்னும் மூன்று பெரும்பாகுபாடு உடையது. நூறு திருவிருத்தங்களால் ஆயது.

திருக்கயிலாய பரம்பரையில் வந்த சந்தான குரவர்கள் இன்னார் என்பது இதன் பாயிரத்தால் பெறப்படுகின்றது. மனமொழி மெய்களால் இயற்றப்படும் கிரியை என்பவை எல்லாம் ஞானம் கிடைத்ததற்கு நிமித்தம், சிவஞானம், திருவருள் கண்ணாகக்காணும் காட்சியாகிய பரஞானம், அக்காட்சிசை விளங்கக் கூறும் அருளூல்களாகிய அபரஞானம் என இரண்டு வகைப்படும்; சிவஞானபோதம் அபரஞானங்களின் முடிந்த முடியாக உள்ளது என்பதையும் பாயிரத்துள் கூறப்படுகின்றன்.

பாயிரத்தில் வரும் இரண்டு திருவிருத்தங்கள் குறிப்பிடத்தக்கவை. ஒன்று 'புறச்சமயத்த்வர்க்கிருளாய்' எனத்தொடங்குவது. இது சித்தாந்த சைவத்தின் தனிச்சிறப்பை இனிது எடுத்து இயம்புவது. மற்றொன்று அவையடக்கச் செய்யுள். இது "தொன்மைய ஆம் எனும் எவையும் நன்றாகா; இன்றுதோன்றிய நூலெனும் எவையும் தீதாகா" எனத் தொடங்குகிறது.

(8) **திருவருட் பயன்** : இது சைவ சித்தாந்த ஞான நெறியைத் தெள்ளத் தெளிய இனிது விளக்குவது செந்தமிழ்ப் பொதுமறையாகிய திருக்குறளுக்கு ஒழிபு (Supplement) எனக் கொள்ளத்தக்கது.

பதிமுதுநிலை, உயிரவைநிலை, இருண்மலநிலை, அருளது நிலை; அருளுரு நிலை, அறியும் நெறி, உயிர்விளக்கம், இன்புறு நிலை, ஐந்தெழுத்தருள்நிலை, அணைந்தோர் தன்மை என்னும் பத்து அதிகாரங்களை உடையது. அதிகாரம் ஒன்றுக்குப் பத்துக்குறள் வீதம் நூறு குறட்பாக்களால் ஆயது.

"அகர வுயிர்போல் அறிவாகி எங்கும்
நிகரிவிறை நிற்கும் நிறைந்து"

என்பது முதற் பாட்டு.

''கள்ளத் தலைவர் துயர்கருதித் தங்கருணை
வெள்ளத் து அலைவர் மிக''

என்பது இறுதிப் பாட்டு.

(9) **வினா வெண்பா** : இது பதின்மூன்று வெண்பாக்களால் ஆயது இதன் கண் வரும்

''காண்பானும் காட்டுவதும் காண்பதுவும் நீத்துண்மை
காண்பார்கள் நன்முத்தி காணார்கள் - காண்பானும்
காட்டுவதுங் காண்பதுவும் தண்கடந்தைச் சம்பந்தன்
வாட்டுநெறி வாரா தவர்.''

என்னும் செய்யுள் சுத்தாத்வைத சித்தாந்த முத்தியினியல்பை எடுத்துரைக்கின்றது. ''ஞானம், ஞேயம், ஞாதுரு எனப் பகுத்து உணர்வார்க்கு அநுபவநிலை வரவில்லை, அவை முத்தி நிலையில் இல்லை என்பாரும் இன்புறு நிலையை எய்துவார் அல்லர்'' என்பது இதன் பொருள்.

(10) **போற்றிப் பஃறொடை** : இறைவன் திருவருள் உயிர்களை அநாதி கேவலத்திலிருந்து எடுத்துச் சகல நிலைக்கு உய்த்துப் பிறப்பிறப்புட்பட்டுச் சுழல வைக்கின்றது. பின், பக்குவ நிலை யெய்திய உயிர்களை, ஞானதீக்கை செய்து சுத்த நிலை எனப்படும் பரமுத்தி நிலையில் உய்கின்றது. இவ்வாறு உயிர்களுக்குத் திருவருள் தொன்றுதொட்டு செய்துவரும் உபகாரங்களை எடுத்துக் கூறிப் போற்றுவதாக ஆக்கப்பட்டுள்ளது.

(11) **கொடிக்கவி** : தில்லையிலே கொடியேறும் பொருட்டுப் பாடப்பட்டது. ஒரு கட்டளைக் கலித்துறையும் நான்கு வெண்பாக்களும் ஆக ஐந்து பாட்டுகளால் ஆயது. ஞானதீக்கையின் பயனும், திருவைந்தெழுத்தின் ஓதுமுறையும் பொருளும் உரைப்பது.

(12) **நெஞ்சுவிடு தூது** : ஆசிரியர் உமாபதிசிவனார் தம்முடைய ஞானாசிரியராகிய மறை ஞான சம்பந்தபால் சென்று மாலையை வாங்கி வரும்படி தம் நெஞ்சுக்குச் சொல்லித் தூது அனுப்புவதாகச் செய்யப்பட்டது. பல சமயங்களின் பொருணிலைகளை இது, இது என இனிது விளக்கி சித்தாந்த சைவத்தின் சிறப்பை உணர்விப்பது.

(13) **உண்மை நெறி விளக்கம்** : உயிர் சகல நிலையின் நீங்கிச் சுத்தநிலை எய்தி இறைவன் திருவடியைத் தலைக்கூடும் ஞானநெறிக்கண், மேற்கொள்ள

வேண்டிய ஞானச்செய்திகலை (1) தத்துவ உருவம், (2) தத்துவக் காட்சி, (3) தத்துவ சுத்தி, (4) ஆன்ம உருவம், (5) ஆன்மக் காட்சி, (6) ஆன்ம சுத்தி, (7) சிவ ரூபம், (8) சிவ தரிசனம், (9) சிவ யோகம், (10) சிவபோகம் என்னும் தசகாரியங்களாக பத்துச் செயல்களாக வைத்து விளக்குவது. இந்நூல் உமாபதி சிவனாரால் இயற்றப்பட்டது எனக் கொள்ளுதல் மரபாக இருந்தது; இக்கால ஆராய்ச்சி வேறு முடிவி கண்டுள்ளது. அம்முடிபு இது சீர்காழித் தத்துவநாதர் இயற்றிய தென்பது.

(14) **சங்கற்ப நிராகரணம்** : பரமுத்தி நிலையைத் தலைப்படும் உயிர் மேற்கொள்ள வேண்டிய ஞானச் செய்திகளில் ஐயமும், மருட்கையும் விளைப்பனவாகப் பல சமயங்களில் முடிவுகள் உள்ளன. அச்சமயங்களை (1) மாயாவாதம், (2) ஐக்கியவாதம் (3) பாடாணவாதம் (4) பேதவாதம், (5) சிவசமவாதம், (6) சங்கிராந்த வாதம், (7) ஈசுவர அவிகாரவாதம், (8) நிமித்தகாரண பரிணாம வாதம், (9) சைவ வாதம் என வகைப்படுத்தி, அவற்றின் முடிவுகளைச் சங்கற்பங்கள் என வைத்துக்கூறி, அச்சங்கற்பங்களை நிராகரிக்கின்றது. இந்நூல் 13 அகவற்பாக்களையும் 1 வெண்பாவையும் உடையது.

சாலிவாகன ஆண்டு 1235 (கி.பி. 1313) -ல் திருத்தில்லையில் ஆனிப்பெரு விழாவில், ஆறாம் நாளன்று சைவாகம வழி ஒழுகும் எண்மரும், மாயாவாதி ஒருவனும் தேர்மண்டபத்தில் ஒருபுறம் இருந்தனர். மெய்கண்டதேவர் திருவருள்பெற்ற அடியார் ஒருவர் மற்றொரு பக்கம் இருந்தனர். உண்மைவிழைவோன் ஒருவன் அங்குவந்து, "தம்பிரானார் திருவருணிலை எத்தன்மைத்து?" என மாயாவாதியை வினவினான். அவன் அதற்குத் தான் கற்றதை விடையாகத்தா, ஏனைய எண்மரும் அப்பேச்சிற் குறுக்கிட்டு ஒருவரை ஒருவர் மறுத்துத் கருத்துக்களைக் கூறினார். அன்னோர் கூற்றுக்களைக் கேட்டிருந்த மெய்கண்டதேவரின் அருள் பெற்ற அடியார் அவற்றையெல்லாம் சங்கற்பங்களாக வைத்து உரைத்து, நிராகரித்து, உண்மை விழைவோனைச் "சிவப்பிரகாசச் செழுந்தமிழ் நூலை"த் திருவருள் சார்பாக நின்று சிந்தித்து உணர்ந்தால் மெய்யுணர்வு நிலையைத் தலைப்படல்கூடும் என அறிவுறுத்துகின்றார். இவ்வாறு இந்நூற்பொருள் அமைந்துள்ளது. இதனால் இதனைச் சிவப்பிரகாசத்தின் பரபக்கம் எனக் கொள்ளலாம்.

இதன்க்ண் நிமித்த காரணபரிணாம வாதம் என்றது சிவாத்துவிதி சைவம் எனவும், சைவவாதம் என்றது சுத்தசைவம் எனவும் கூறப்படும். அவை இரண்டும் சித்தாந்த சைவநெறியோடு பெரிதும் ஒத்து, சில குறியீட்டு வாய்பாடுகளாலும், முத்திநிலை பற்றிய அதிநுட்பல் கருத்துக்களாலும் வேறுபடத் தோன்றுவன ஆகும்.

இக்காகத்து இப்பதினான்கு நூல்களோடு துகளறு போதம் என்னும் ஞான நூலினையும் உடன்கூட்டி, மெய்க்கண்ட நூல்கள் என அச்சிட்டு வழங்குவர்.

துகளறு போதம் மெய்கண்ட தேவர் வழிவந்த சீர்காழிச் சிற்றம்பல நாடிகள் அருலிச் செய்து. இது பரமுத்தி நிலையை எய்தும் ஞான நெறிக்கண் நிற்கும் நிலைகளைப் பூதப்பழிப்பு முதலாகப் பரமானந்த அவசம் வரை முப்பது அவதரம் என வைத்துக் கூறுவது. இம்முப்பதில் முன் ஏழு அவதரங்கள் பாச அவதரம் எனவும், பின் பதினைந்து அவதரங்கள் பசுஅவதரம் எனவும், இறுதி எட்டு அவதரங்கள் பதிஅவதரம் எனவும் வகை செய்யப்படும்.

உண்மைநெறி விளக்கம் இதன் வழிநூல் ஆகும் எனவும், இதன் கண் கூறப்படும் முப்பது அவதரங்களும், உண்மை நெறிவிளக்கம் கூறும் தசகாரியமாய் அடங்கும் எனவும் சிந்தனை உரை கூறுகின்றது.

இதுகாறும் விளக்கம் செய்யப்பட்ட பதினைந்து ஞான நூல்களும் மெய்யுணர்வின் இயல்பும், விளைவும், பயனும், உணர விரும்புவோர் அனைவராலும் ஓதி உணரத் தக்கவை.

உள நூலில் (Psychology) ஆன்மா Psyche, Soul, Self) மனம் (Mind) என்றாற்போல வரும் சொற்களின் திட்டவட்டமான கருத்தை நிச்சயத்தற்கு இந்த நூல்களின் ஆராய்ச்சி உதவியாக இருக்கக்கூடும் என்பதை உளநூல் ஆசிரியர்களுக்குத் தெரிவித்தல் இந்து சமயப் பற்றுடையோர்கக்குக் கடமை ஆகும்.

## மெய்கண்ட நூல்கள்தோன்றக் காரணமாக இருந்த சூழ்நிலை

மேலே விளக்கபட்ட மெய்கண்ட நூல்களின் போக்கு, நோக்கு, பொருணிலை, அருமை, பெருமை என்பவற்றை உள்ளவாறு உணர வேண்டின், அவற்றைத் தமிழகச் சமய இயக்க வரலாற்றைப் பின்னணியாக வைத்துக் கருதுதல் வேண்டும். ஆதலால், அவ்வரலாறு கீழே சுருக்கமாகத் தரப்படுகின்றது.

தமிழகத்தில் வைதிக ஒழுக்கநெறி, சமய வாழ்க்கை, இலக்கியம், பண்பாடு, கலை முதலியவற்றின் மறுமலர்ச்சி கி.பி. ஏழாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் உண்டாயிற்று என்பதும், அதற்குக் காரணமாக இருந்த பெருமக்கள் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் என்னும் இரு பேராசிரியர்கள் என்பதும் சைவ இலக்கியங்கள் என்ற தலைப்பின் கீழ்க் காட்டப்பட்டன. அவ்விரண்டு ஆசிரியர்களால் வைதிக நெறிக்கு மாறுபட்ட புறச்சமய இடர்கள் நீங்கிவிட்டமையால், தமிழகத்தில் சிவநெறியோடு பிற வைதிக நெறிகளும், திருப்பதிக வழக்கோடு வேத வழக்கும், சிவகாம வழக்கும் தலையெடுத்து வளரத்தொடங்கின. அதன் பயனாகப் பின்காணும் விளைவுகள் உளவாயின்:-

1. **ஆழ்வார்கள் தோற்றம்** : கி.பி. எட்டாம் நூற்றாண்டில் தோன்றிய நம்மாழ்வார், பெரியாழ்வார், சூடிக்கொடுத்த நாச்சியார், திருமங்கை மன்னன்

முதலிய திருமால் அன்பர்கள் இயற்றிய பிரபந்தங்களால் திருமாலை முதற் கடவுளாகக் கொண்டு வழிபடும் கொள்கை வளர்வதாயிற்று.

ஆழ்வார்கள் நெறி பலவகைகளில் சிவநெறியோடு ஒத்தது. ஆயினும், அதனைச் சைவர்கல் வேறாகக் கருதி வருவதற்கு முக்கிய காரணங்கள் இரண்டு உள்ளன. (1) சிவநெறியில் முதற் கடவுளுக்குப்பிறப்பு (அல்லது அவதாரம்) கூறப்படுவதில்லை. 'நால்வகை யோனிவாய்ப்பட்டுப் பிறப்பன யாவை, அவையெல்லாம் உயிர்கள் (சீவ வர்க்கம்); அங்ஙனம் பிறத்தல் இல்லது யாது, அதுவே பதிப்பொருள் (முதற்கடவுள்) என்பது சைவத்தின் அடிப்படைக்கொள்கை. ஆதலினால், கடவுளுக்கு உபசாரமாகக்கூடப் பிறப்பு உண்டு என்று கூறுதல் சைவ மரபு அன்று. ஆனால், ஆழ்வார்கள் கடவுலுக்குப் பத்து அவதாரமாகிய பிறப்பு உண்டு என்பதை உடன்பட்டவர்கள். (2) பரமுத்தி நிலையாகிய இன்புறு நிலையில் உயிர்க்கோ கடவுளுக்கோ உடம்பு உண்டு என்ற கொள்கை சைவத்தில் இல்லை. உயிர் மாயாகாரியமாகிய கருவி கரணங்களின் தொடர்பு சிறிதும் இன்றித் தன் உண்மை நிலையில் நிற்ப, அந்தநிலையில் அதற்குச் சார்பாக உள்ள முதல்வன் திருவருள் பூவில் விரியு மணம்போல விளங்கித்தோன்றி, அவ்வுயிரைத் தன் வியாபகத்தில் அடங்கக்கொண்டு, சிவவண்ணமாக்கி இன்புறுத்தும். இங்ஙனம், 'ஓங்குணர்வினுள் அடங்கி, உள்ளத்துள் இன்பொடுங்க 'நிற்பதே பரமுத்தி என்பர். வைணவத்தில் பரமுத்தி நிலையில் கடவுளுக்கும் உயிர்களுக்கும் திவ்விய சரீரம் உள்ளன.

["I have always felt that the real paralysis of Indian life had begun when the Acharyas were exalted over the Rishis when cold formalism superseded passionate devotion, and when categories were praised above realizations." Sri K. S. Ramaswami Sastri in his Foreward to "Sri Rudram (Tamil Commentary.)]

2. **மதாசாரியர்களின் தோற்றம்** : கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வடமொழி நூல்களையே முக்கிய பிரமாணமாக வைத்துச் சமயக் கொள்கைகளைக் கல்வி அறிவு கொண்டு நிறுவும் வழக்கம் வலியுறுவதாயிற்று. திருநான்மறை முடிவு எனப்படும் உபநிடதங்களின் பொருள் முடிவைப் பிரம சூத்திரங்களைத் துணைக்கொண்டு நிச்சயிக்க வேண்டும் என்பதுபற்றிப் பலர் பிரம சூத்திரங்களுக்கும், உபநிடதங்களுட் பற்பலவற்றுக்கும் உரைகள் எழுதத்தொடங்கினர். அவ்வுரைகள் ஒன்றோடு ஒன்று மாறுபட்டனவாய் வேறு வேறு மதங்கள் தமிழகத்தே தோன்றுவதற்குக் காரணமாகி விட்டன. உண்மையநுபவம் வாய்க்கப்பெற்ற அருளாசிரியர்களைவிட, பேருரைகள் எழுதிய போதகாசிரியர்களே அதிகம் போற்றப்படுவாராயினர். (1) இவ்வாறு மதங்களைத் தோற்றுவித்த ஆசிரியர்களுள் குறிப்பிடத்தக்கவர் மூவர். அவர் சங்கரர், இராமானுஜர், மத்துவர் என்போர் ஆவர்.

(1) **சங்கரர்** : இவர் சுமார் இ.பி. 788-ல் வடதிருவாங்கூரில் தோன்றியவர். 'முக்கிய உபநிடதங்களின் முடிவு பிரமம் ஒன்றே உள்பொருள். உலகம் பிரமத்தின் தோற்றமே' என்பது இவர் கொள்கை.

இவர் பிரமம் எனக் கூறுவது உடம்புதோறும் நிகழும் உணர்வுக்கு அடிப்படையாக உள்ள உயிரையே ஆகும். அதுவும் ஒன்றேயன்றிப் பல அன்று என்பது இவர் கொள்கை.

இக்கொள்கை சிவநெறிக் கொள்கைக்கு மாறானது என்பது உணரத்தக்கது. சைவத்தில் கடவுள், உயிர், தளை என்னும் மூன்றும் உள்பொருள்கள். அவை ஒன்றிலிருந்து பிறிதொன்று தோன்றியது எனக் கூறப்படாதவை; என்றும் உள்ள பொருள்கள் கடவுளும் உயிரும் அறிவுடைப் பொருள்கள் எனினும், கடவுள் இயற்கை உணர்வுள்ள பொருள், சார்ந்ததன் வண்ணமாய் ஏகதேசப்படாது, எல்லாம் ஒருங்கே அறியும் அறிவு, உணர்த்தும் அறிவு; அது ஒன்றே உயிர்கள் செயற்கையால் அறிவன, ஒன்றொன்றாகச் சுட்டிச் சார்ந்ததன் வண்ணமாய் அழுந்தி ஏக தேசப்பட்டு அறிவன, அறிவிக்க அறிவன; அவை பல. தளை அறிவில் பொருள், உயிர்களின் பிறப்புக்குக் காரணமாக உள்ளவை.

இனி, சங்கரர் கொண்ட கொள்கைகளுள் முக்கியமாகக் குறிப்பிடத் தக்கது, அத்வைதம் என உபநிடதங்களுள் வரும் சொல்லுக்கு அவர் கொண்ட பொருள். இச்சொல் பல இடங்களில் வரினும், சாந்தோக்கியத்தில் அது வரும் இடம் பற்றியே பெரிதும் ஆராயப்படும்.

சுவேதகேது என்னும் குமாரனுக்கு அவன் தந்தை முதற் பொருளை அறிவுறுத்தத் தலைப்பட்டு, முதற்கண் பின்வருமாறு கூறுகிறான். "ஏ நல்லோய்! இது முதற்கண் ஒன்றேயாய், அத்விதீயமாகிய சத்தாக இருந்தது"

இத்தொடரில் இது என்றது பெயரும் வடிவும் உள்ளதாய் தம்மால் அறியப்படும் உலகை முதற்கண் என்றது இவ்வுலகு காரியப்படுதற்கு முன், அதாவது சிருட்டிக்கு முன் என்றபடி, எனவே, இவ்வுலகு காரியப்படுதற்கு முன், நான் வேறு புலப்படாது, காரண ரூபத்தில் முதற்பொருளை ஆதாரமாகக் கொண்டு அவனிற் பிரிப்பின்றி இருந்தது என்பது இத்தொடரின் திரண்ட கருத்து.

இத்தொடர்க்குச் சங்கரர் கொண்ட பொருள், 'முடிந்த உண்மைப் பொருள் (Ultimate reality) இருப்பு மாத்திரமாகிய, ஒன்றேயான பிரமமே' என்பது, அவர் கருத்தின்படி அத்விதீயம் என்பது இரண்டாவதொரு பொருளின் இன்மையைக் குறிக்கும். எனவே, பொருள் ஒன்றே என்பது முடிவு. பிரமம் அறிவு மாத்திரமாயிருப்பது. அதற்கு வேற்றினமாகிய சடப்பொருள்களையோ, ஒத்த இனமாகிய அறிவுள்ள உயிர்களையோ, பிரமத்திற்கு வேறாகக் கொண்டு உரைத்தல்

பொருந்தாது. இன்னும், பிரமத்தைத் தனக்கு உள்ளே கூட அறிவை உடையது என்றாற்போலக் குணகுணி பாவமோ, அவயவ அவயவிபாவமோ தோன்ற உரைக்கக் கூடாது. அறிவு மாத்திரமாக உள்ள கேவலம் ஒன்று எனப்படும் என்பர்.

இவ்வாறு, இவர் அத்விதீயம் என்னும் சொற்குப் பொருள் ஒன்று எனக்கொண்டதோடு, தமது ஒரு பொருட் கொள்கையை வலியுறுத்தி (விஜாதீய, சஜாதீய, சுவகத பேதங்கள் இன்றிக்) கேவலம் ஒன்று எனக் கூறுதலால், இவர் மதம் கேவலாத்துவிதம் எனப்படும்.

(2) **இராமானுஜர்** : இவர் சங்கரர்க்குப்பின் இருநூறு ஆண்டுகள் கழித்து, செங்கற்பட்டு மாவட்டத்தில் தோன்றியவர். ஆழ்வார்களுடைய திவ்வியப் பிரபந்தங்களின் பத்திநெறிக்கு மாறுபடாதபடி பிரம சூத்திரங்களுக்கு உரை செய்து, சங்கரர் கொள்கையை மறுத்து மதம் தாபித்தார்.

மேலே காட்டிய அத்விதீயம் என்னும் சொற்குப் பொருள், சங்கரர் கொண்டது போல, ஒன்று என்றே கொண்டாராயினும், மேற்காட்டிய வாக்கியத்தின் தாற்பரியத்தை வேறாகக் கொண்டார். அரசன் ஒருவன் இருந்தான் என்றால், அவனுக்கு நாடில்லை; குடிமக்கள் இல்லை; அவனும் ஆடையோ அணியோ ஒன்றும் இன்றிக் கேவலம் ஒருவனாய் நிருவாணியாய் உளன் என்று யாரும் கொள்ளமாட்டார். ஆதலினால், உலகமாகிய உடைமையும், உயிர்களாகிய அடிமையும், அனந்த கலியாண குணங்களாகியும் பண்பும் முதல்வனுக்கு இல்லை என்றால் பொருந்தாது. பாசமும், உயிரும், அனந்தகலியாண குணமும் முதல்வனுக்கு விசேடணங்களாக வேதங்களுள் கூறப்படுதலின், அவற்றால் விசேடிக்கப்பட்டு விசிட்டமாய் உள்ள பிரமம் ஒன்று என்பதே மேற்படி வாக்கியத்தின் தாற்பரியம் என நிறுவினார். இவ்வாறு இவர் தம் கருத்து விளங்குவதற்கு விசிட்டம் என்னும் அடையை அத்வைதம் என்னும் சொல்லோடு கூட்டி மொழிந்தமையின், இவர் மதம் விசிட்டாத்வைதம் எனப்பட்டது.

இவர்கொண்ட தாற்பரியப் பொருள் சிவநெறிக் கொள்கைக்கு ஒத்ததே. ஆயினும், அத்விதீயம் என்னும் சொற்குப் பொருள் ஒன்று என உரைத்தலைச் சைவம் உடன்படுவதில்லை. அகப்பொருள் ஒன்றே (ஏகமேவ) என முன் வந்த சொல்லாலேயே கொள்ளக் கிடக்கின்றது. மீண்டும் கூறுதல், கூறியது கூறுதல் ஆம். உயிர்க்கும் முதல்வனுக்கும் உள்ள சம்பந்தத்தை உணர்த்தும் சொல்லே அத்விதீயம் என்பது. அது உயிரும் கடவுளும் பொருள் வகையால் இரண்டேயாயினும், செலுத்தப்படுவதும் செலுத்துவதுமாகக் கலப்பினால் பிரிப்பின்றி ஒன்றேயாய் நிற்றலைக் குறிக்கும் என்பது சைவர் கொண்ட பொருள்.

இங்ஙனம் சிவநெறியோடு மாறுபட்ட கொள்கைகள் தமிழகத்தே மக்களிடைப் பாவிய காலத்தில் அவற்றை அவ்வப்போது மறுத்து வேதாகமங்களின் உண்மை முடிபை உரைத்து வந்தவர்கள் அரதத்தாசாரியர், கச்சியப்பசிவாசாரியர், வாகீச முனிவர் முதலாகப் பலர் இருப்பினும், மெய்கண்ட முதல்வர் ஒருவரே உண்மையின் இணைப்பு இன்னது எனக் கோவைப்படுத்தி உணர்த்தும் திருவர்ட் செங்கதிரவனாகத் தமிழகத்தே திகழ்வாராயினர்.

(3) **அரதத்தர்** : இவர் ஒன்பதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில், சோணாட்டில், கஞ்சனூரில், வைணவக்குடியில் தோன்றியவர். இளம் பருவத்திலேயே சிவபிரான் திருவருள் பெற்று அற்புதங்களாலும், வேதப்பிரமாணங்களாலும் சிவபிரானது முழு முதற்றன்மையினையும் முப்பொருள் உண்மையினையும் தெளிவித்தருளினார். இவர் அருளிச்செய்துள்ள நூல்கள் சுருதிசூக்திமாலை, பஞ்சரத்தின் மாலிகை முதலியவை. இவை வடமொழியில் உள்ளவை; தமிழ் மொழி பெயர்ப்புக்களுடன் வெளியிடப்பட்டுள்ளன.

சுருதிசூக்திமாலையுள் கூறப்படும் பொருள்கள் அறிஞர்களால் சிந்திக்கத்தக்கவை. அது வேதங்களின் பொருள் முடிபைக் கோவைப்படுத்திக் கீழே வருமாறு கூறுகிறது. (1) சிவபெருமான் உயிர்களின் வணக்கத்திற்கு உரியவர், (2) அவர் அருட்குணங்களால் நிறைந்தவர், (3) அவரே காயத்திரி மந்திரத்தின் முக்கியப் பொருளாகிய உயிர்ப்பிரோகர் ஆவர் (4) அவரே மகாநாராயண உபநிடதத்திற் கூறப்படும் தகர வித்தையில் உபாசிக்கப்படும் பொருளாக உள்ளார், (5) அவரே வைதிக ஆராதனையாகிய வேள்விக்கு இறைவன் ஆவர் - என்னும் ஐந்து உண்மைகளின்மேல் வைத்து வேதங்களின் தாற்பரியத்தை உணர்த்துகின்றார்.

இதன் கண் 151 சுலோகங்கள் உள்ளன. அவற்றில் இரண்டு சுலோகங்களின் பொருள் இங்கே தரப்படுகின்றது.

(அ) 47ஆம் சுலோகம் : மகேசுவர, நீ அருளிச்செய்த நூல்கள், நீ உலகத்தை இடமாகக் கொண்டு தங்கி இருத்தல் பற்றி, உன்னை உலக உருவினன என உபசாரத்தாற் கூறுகின்றன. வேதத்தின் நுண் பொருள்களை உணரவல்ல ஞானிகள் அதன் தாற்பரியத்தை அறிகின்றார்கள். மற்று மந்தமதிகளாக உள்ளவர்கள் உபசாரம் என்பது அறியமாட்டாது சொன்மாத்திரையே பற்றி உண்மை என்று மயங்குவர்

(ஆ) 155-ஆம் சுலோகம் : "(இறைவனே!) வேதசிரசு உன் உபாசனையில் (சிவோஹம் அஸ்மி என்றாற்போல) அத்வைத பாவனையையே விதிக்கின்றது. அதுபற்றிச் சீவான்மாவுக்கும் பரமான்மாவுக்கும் முற்றொருமை (நிருபசரித ஐக்கியம்) கூறுதல் பொருந்துவது அன்று, என்னை? கருடோஹம் பாவனை செய்வோன் அம்மந்திரத்தின் வேறே என்பது தெளிவு. ஆயினும் அப்பாவனை

அரவின் நஞ்சை நீக்கத் தவறுவதில்லை (இவ்வாறே உபநிடதங்கள் கூறும் அத்வைத பாவனை உயிரின் மூலமலத்தை நீக்குவதற்கு இன்றியமையாதது ஆகின்றது)''

**குறிப்பு** : 'பிரமம் ஒன்றே உள்பொருள்' எனவும், 'அத்வைதம்' என்னும் கருதி உயிர் பிரமத்தின் வேறொன்று, உயிரும் பிரமமும் ஒன்றே என்பதை உணர்த்தும் எனவும், சங்கரர் நிறுவினார் என மேலே கூறினோம். இங்குக் காட்டிய அரதத்தசாரியர் திருவாக்குக்கள் சங்கரர் கொள்கையை மறுத்து எழுந்தமை காண்க.

இன்னும், சங்கரர் வேதத்தின் கன்மகாண்டத்தைப் பொருட்படுத்தாது தள்ளி முக்கிய உபநிடதங்கள் மாத்திரையே பற்றிப் பொருணிச்சயம் உணர்த்தியிருக்கிறார். ஆனால், அரதத்தாசாரியர் வேதம், வேதாந்தம் இரண்டையும் சமமாகப் பிரமாணம் எனக் கொண்டு ஆராய்ந்து பொருணிச்சயம் உணர்த்துகிறார் என்னும் வேறுபாடும் நினைவிற் கொள்ளற்பாலது, அரதத்த ஆசாரியர் கொண்ட விரிந்த ஆராய்ச்சி முறையே சைவர்களால் கைக் கொள்ளப்படுவது.

இனி, மத்துவர் மெய்கண்ட முதல்வர் காலத்துக்குப் பின்னே தோன்றியவர், ஆயினும், மெய்கண்ட நூல்களின் பொருணிலையத் தெளிய உணர்வதற்கு அவர் மதமும் உணரத்தக்கது. ஆதலினால், அது பின்னர்ச் சுருக்கமாகத் தரப்படுகின்றது.

(3) **மத்துவர் கொள்கை** : மத்துவர் என வழங்கும் ஆனந்த தீர்த்தர் என்பவர் சங்கரர், இராமாநுஜர் என்னும் மதாசாரியர்களுடைய கொள்கைகளை மறுத்து, பிரம சூத்திரங்களுக்கு உரை எழுதினார். உயிரும் கடவுளும் வேறு வேறான பொருள்களே என்னும் அடிப்படையின் மேல் இவர் கொள்கை இருத்தலினால், இவர் கொள்கை இருத்தலினால், இவர் மதம் பேதவாதம் எனப்படும்.

'திருமாலே உயர்ந்த தெய்வம், அவர்க்குச் செய்யும் பத்தியே முத்திக்குச் சிறந்த சாதனம். முத்திநிலையில், உயிர்கள் ஸ்ரீவைகுந்தத்தில் இறைவனோடு ஒத்த கருத்து உடையவர்களாய் இருக்கும்.' இவ்வாறு முதல்வனும் உயிர்களும் இடவொருமையும் கருத்து ஒருமையும் உடைமையே ஐக்கியம் ஆகும். உயிர்கள் அடிப்படையில் சத்துவம், இராசதம், தாமதம் என்னும் குணங்கள் பற்றி மூவகைப்படும். ஆதலால், அவை அடையும் முத்தி நிலையும் மூன் வகைப்பட்டு இருக்கும். அவை (1) இன்பமே உள்ள முத்தி (2) இன்பமும் துன்பமும் உள்ள முத்தி (3) துன்பமே உள்ள முத்தி என்பவை. இவை மத்துவர் கொள்கையின் சுருக்கம்.

இவர் காலம் கி.பி. 1238 முதல் 1318 வரை, ஆதலினால், மெய்கண்ட தேவரும் அவர் தம் மாணாக்கர் அருணந்தி சிவனாரும் இவர் காலத்துக்கு முற்பட்டவர்கள் ஆவர். உமாபதிசிவனார் இவர் மதத்தை அறிந்திருத்தல் கூடும்.

(4) **சைவாசிரியகளது வருகை** : சிவகாம நெறியும் சிவவேதியர் மரபும் நம் தமிழகத்தே தொன்றுதொட்டு நிலவி வருவன. பத்தாந்திருமுறையாகிய திருமந்திரம் சிவாகமப் பொருளியலை ஒழுங்குபட வைத்து உணர்த்துகின்றது. அன்றியும் திருஞானசம்பந்தர் தேவாரங்கள் சிவகாம விதிகளை நான்மறை விதிகளோடு முழுவதும் கொண்டுள்ளன என உணர்த்துகின்றார் நம்பியண்டார் நம்பிகள்.

''பன்மறையோர் செய்தொழிலும் பரமசிவாகமவிதியும்
நன்மறையின் விதிமுழுதும் ஒழிவின்றி நவின்றனையே''

என்பது அவர் வாய்மொழி. ''தொகுத்தவன் அருமறை அங்கம், ஆகமம்'', ''ஆகமமாகி நின்றண்ணிப்பான் தாள்வாழ்க'' என்றாற் போன்ற தொடர்கள் தேவாரம், திருவாசகம் முதலியவற்றில் வருகின்றன. புகழ்த்துணை நாயனாரும், நம்பி ஆரூரரும் முதற் சைவர் எனப்படும் சிவ வேதியர் மரபைச் சார்ந்தவர்கள் என்பது பெரிய புராணத்தால் விளங்கும் உண்மை.

ஆயினும், மூலாகமங்கள் இருபத்தெட்டு, உபாகமங்கள் 207 என்பவை போன்ற வரையறைகளும் அவற்றின் வரலாறு கூறும் சில சம்பிரதாய் உரைகளும், இவை போல்வன பிறவும் பதினொன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்திற்குப்பின் தான் தமிழகத்தே பிரசாரஞ் செய்யப்பட்டுப் பரவின என்பது சரித்திரத்தால் உணரப்படுகிறது.

திரிலோசனசிவாசாரியர் இயற்றிய ''சித்தாந்த சாராவளி'' என்னும் வடநூல், ஆகமங்களின் நாற்பாதப் பொருள்களையும் வரிசைப்படுத்திச் சுருக்கமாகக் கூறுவது. அதன் கிரியா பாதத்தின் இறுதியில் சைவாசாரியர் வரலாறு கூறப்படுகிறது. அவ்விடத்தில் அந்நூலின் உரையாசிரியராகிய அநந்த சிவாசாரியர் ''இங்குப் பூர்வகதை'' என ஒரு வரலாற்றுக் குறிப்பைத் தருகின்றார்.

''கோதாவரிக் கரையில் மந்திரகாளி என்ற ஒரு பட்டணம் உண்டு அங்கு மந்திர காளீசுவரரைச் சூழ ஆமர்த்தகம், புட்பகிரி, கோளகி, இரணபத்திரம் என நான்கு சைவ மடங்கள் இருந்தன. அவற்றில் இருந்த சைவாசாரியர்கள் பலரை, இராசேந்திர சோழன், தான் கங்காஸ்நானம் செய்து திரும்பும்போது உடன் அழைத்துப் போந்து, காஞ்சி மண்டலத்திலும், சோழ மண்டலத்திலும் தாபித்தான். அதனால், அவ்விடங்களிலும் வேறு எங்கும் சைவ சம்பிரதாயம் பரவிற்று'' என்பது அக்குறிப்பு.

இதிற் கூறப்படும் மன்னன் கங்கைகொண்ட சோழன் என்னும் சிறப்புப் பெயர் பெற்ற முதல் இராஜேந்திரன் எனவும், இந்நிகழ்ச்சி கி.பி. 1023 என்னும் அளவில் ஏற்பட்டிருக்க வேண்டும் எனவும் கல்வெட்டுச் சான்றுகளோடு கலந்து நோக்கித்

துணிகின்றர் திரு. டி. வி. சதாசிவ பண்டாரத்தார் அவர்கள் இங்கு நிகண்டு நூல்களாகிய திவாகரம், பிங்கலத்தை என்பவை வேதம், அங்கம், புராணம், உபபுராணம், மிருதி என்பவற்றின் பெயர்களையும் தொகைகளையும் கூறுவன ஆகவும், ஆகமங்களின் பெயர்களையும் தொகையையும் அவ்வாறு எடுத்துக் கூறாமையும் கருதற்பாலது.

திருமந்திரத்தில் ஆகமச் சிறப்பு என்னும் பகுதியில் ‘‘அஞ்சொடு இருபத்து மூன்றுள ஆகமம்’’ என்னும் தொடர் காணப்படினும், பின், அப்பகுதியில் ‘‘நவஆகமம் எங்கள் நந்தி பெற்றான்’’ எனத் தொடங்கி, ஒன்பது பெயர்கள் கூறப்படுதலாலும், அவற்றுட் சிலவே மூலாகமங்களின் பெயராக இருத்தலாலும், யாமளம் என்னும் பெயரும் அவற்றுள் ஒன்றாக இருத்தலாலும் அத்தொடர்களைத் திருமூலர் வாக்குத்தான் எனத்துணிதல் இயலாது, மேற்கூறியபடி பதினொன்றாம் நூற்றாண்டில் முற்பகுதியில் தமிழகத்தே வந்த சைவாசாரியர்களும் அவர்கள் முன்னோட்களும் சைவபத்ததிகள், பிரகரண நூல்கள், ஆகமங்களுக்கு உரைகள் முதலியவற்றை இயற்றினார்கள். இவற்றால் சிவகாம நெறிபற்றிய விளக்கங்களை உணர முடிகிறது. பூசா முறைகள், தீக்கைமுறைகள், பிரதிட்டை முறைகள் என்பன சிற்சில வேறுபாடுகளுடனும், விஸ்தாரத்துடனும் இவற்றால் கூறப்படுகின்றன. இவை காரணமாக ஞானபாதப் பொருண்மையில் வேறுபாடுகள் தோன்றிப் பாடாணவாதம், சிவசமவாதம், சிவசங்கிராந்த வாதம், நிமித்த காரண பரிணாமவாதம் என அகச்சமயங்கள் பல தோன்றலாயின. தீக்கையே முத்திக்கு நேர்ச்சாதனம், ஞானம் என்பது அதற்கு அங்கமே ஆகும் என்றாற்போன்ற பொருந்தாக் கொள்கைகளும் பரவின.

இங்ஙனம் ஆயினும், வடமொழியின் செல்வாக்குத் தமிழகத்தே மிகுந்த காலத்தில் சைவ நாயன்மார்கள் விளக்கியருளிய சிவநெறியை வடமொழி வேத, ஆகம நெறிகளோடு இணைத்துப் போற்றி வந்த பெருமை இச்சைவாசாரியர்களையே சாரும். இவர்களுள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர்கள் நீலகண்ட ஆசிரியர், கச்சியப்ப சிவாச்சாரியர், வாகீச முனிவர் என்போர் ஆவர். நீலகண்ட ஆசிரியர் ஸ்ரீகண்டாசாரியர் எனவும் வழங்கப்படுவர்.

## (1) நீலகண்ட ஆசிரியர்

இவர் வியாசசூத்திரம் எனப்படும் பிரம சூத்திரங்களுக்கு வேத ஆகம நெறிப்படி பாடியம் வகுத்தருளிய சிவானுபூதிச் செல்வர். இவர் இன்ன காலத்து இன்ன இடத்துத் திருவவதாரம் செய்தவர் என்பது தெரியவில்லை. ஆயினும் இவர் சங்கரர் காலத்திற்கு முற்பட்டவர் என்பதும், மேலே குறிப்பிட்ட ஆமாத்தகம் முதலிய நான்கு சைவ மடங்களுக்கு அதிபதிகளாகிய சைவாசாரிய மரபைச்

சார்ந்தவர் என்பதும் தெளிவு. கூர்மபுராணம் முதலியவற்றால் சிவசாரூபம் பெற்ற பதமுத்தர்கள் அவதாரம் என யோகாசாரியர்கள் பலர் கூறப்படுகின்றனர். அவர்களுள் முதற்கண் வைத்து எண்ணப்படுகின்றவர் சுவேதாசிரியர். இச்சுவேதாசாரியரே ஸ்ரீகண்டாசாரியருக்கு ஆசிரியர் என்பது ஸ்ரீகண்டபாஷியத்தால் விளங்குகின்றது. மேலும், வருணபத்ததி, சைவாகம ஞானம்பெற்ற தலையாய சைவாசாரியர்களிக் கூறுமிடத்து, ‘‘ஸ்ரீதுருவாசர் பைங்கலாசாரியர், உக்கிரச்சோதி, சத்தியசோதி, ஸ்ரீகண்டர், ஸ்ரீவிஷ்ணுகண்டர், வித்யாகண்டர், ராமகண்டர்’’ என வரிசைப்படுத்தி வைத்து, இவர்களைத் தேசி கோத்தமர்கள் எனப் போற்றுகிறது. இவ்வரிசையில் இவர்தம் பெயர் உள்ளது.

சங்கரர, இராமாநுஜர், மத்துவர் என்ற மூவரும் முறையே கேவலாத்துவிதம், விசிட்டாத்துவிதம், துவிதம், என்னும் மதங்களை ஆக்கி நிறுவினார்கள். ஆதலினால், அவர்கள் மதாசாரியர்கள் என வழங்கப்பட்டனர். அவர்கள் ஆக்கிய மதங்களும் திரிமதம் (மும்மதம்) என வழங்கப்படும். ஆனால் நீலகண்ட ஆசிரியர் எம்மதத்தையும் ஆக்க வந்தவர் அல்லர். மற்று உபநிடதங்களின் பொருணிலையை வேதம் ஆகமம் என்பவற்றின் பொருள் ஒழுங்கின் பாற்படுத்தி விளக்கியருளினவர் (He is not an another of an independent system, but an interpreter of the Upanishads) மேலும் மதாசாரியர் மூவரும் சில உபநிடதங்களை மாத்திரம் முக்கியமானவை என வைத்துப் பிரமாணமாகக் கொண்டவர்கள். சிவாகமங்களைப் பொருளாகவே கொள்ளாதவர்கள். ஆனால் நீலகண்ட ஆசிரியர் வேதத்தின் கன்மகாண்டம், ஞானகாண்டம் என்னும் இரண்டையும் சிவாகாமங்களையும் பிரமாணமாகக்கொண்டு அவற்றின் பொருணிலைகளை இணைத்துக் கோவை படக்கொண்டவர்.

இங்ஙனம் கொண்ட போதிலும், பரிணாமாத் (பரிணமித்தலால்) என வரும் வியாச சூத்திரம்பற்றி, முதல்வனது சிற்சத்திக்குப் பரிணாமங் கூறுதலாலும், முதல்வனை உபாதான காரணமும் ஆவன் எனக் கொள்ளுதலாலும் இவர் கொள்கை சிவாத்துவிதம் என வேறாகவே வைத்து எண்ணப்படும்.

## (2) கச்சியப்ப சிவாசாரியர்

இவர் காஞ்சிமாநகரில் தோன்றி, தமிழும் வடமொழியும் வல்லவராய்த் திகழ்ந்தவர். ‘‘கந்தபுராணம்’’ என்னும் பெருங் காப்பியத்தை இயற்றியருளி நன்மக்களைச் சித்தாந்த சைவ நெறியில் நிற்குமாறு உதவினவர். பெரிய புராணம் அனுபவ ஞானத்தின் அதிநுட்பங்களை விளக்கி நிற்பதுபோல, கந்த புராணம் வேத ஆகமங்களாகிய கலை ஞானத்தின் அதிநுட்பங்களை எடுத்து இனிது விளக்குவது ஆகும். இப்புராணம் வேதம், வேதாந்தம், ஆகமம், ஆகமாந்தம் என்பவற்றின்

வரலாறு, பொருண் முடிபு என்பவற்றை உணர்வதற்குச் சிறந்த பிரமாண நூலாக விளங்கி வருகிறது. இவர் காலம் பதினொன்றாம் நூற்றாண்டின் இறுதி எனப்படுகிறது.

## (3) வாகீச முனிவர்

பன்னிரண்டாம் நூற்றாண்டின் இறுதியில் சென்னையை அடுத்துள்ள திருவெற்றியூரில் சதுரானன பண்டிதர் மடம் என்பதொன்று விளக்கத்துடன் இருந்தது. அம் மடத்தில் தங்கியிருந்து கொண்டு, சோமசம்புபத்ததி, ஆளுடைய நம்பி ஸ்ரீபுராணம் முதலியவற்றைப் பொதுமக்களுக்கு விளக்கிச் சொற்பொழிவு நிகழ்த்தி வந்தவர் வாகீச முனிவர். இவரும் கச்சியப்பரைப் போல இருமொழியும் வல்லவர். சிவாகமங்களின் நாற்பாதப் பொருள்களையும் ஆராய்ந்து, நெறிப்பட உணர்ந்து, அப்பொருள்களைத் திரட்டிச் செந்தமிழ் மொழியில் உணர்ந்து, அப்பொருள்களைத் திரட்டிச் செந்தமிழ் மொழியில் ஞானாமிருதம் என்னும் அருமந்த நூலாக ஆக்கியருளிய பெருமையை உடையவர். இந்நூலில் இக்காலத்து ஞானபாதப் பொருண்மை உணர்த்தும் பக்தி மட்டுமே உள்ளது. இது சங்கச் செய்யுட்களின் பெருமித நடையும் அமைப்பும் பெற்ற அகவற்பாக்களால் ஆயது.

இதுகாறும் சுருக்கமாக உரைத்த தமிழகச் சமய இயக்க வரலாற்றிலிருந்து பன்னிரண்டாம் நூற்றாண்டில் உபநிடதக் கருத்துக்கள், பிரம சூத்திரம்பற்றிய உரைகள், சைவாகமக் கருத்துக்கள் என்பவை பற்பல வேறுபாடுகளை உடையவையாய்த் தமிழகத்தே மிக்கு நிலவின என்பது விளங்கும். இதன் விளைவாக மக்கள் உள்ளங்களில் பெருங்குழப்பம் உண்டாக, அக்குழப்பம் நீங்கி மெய்ந்நெறியை மக்கள் தெள்ளிதன் உணர்ந்து ஒழுகி உய்தற்பொருட்டுத் திருவவதாரஞ் செய்தவரே மெய்கண்டதேவ நாயனார் ஆவர். அவரும் அவர் வழி வந்தோரும் செய்துள்ள ஞான நூல்கள் மேற்கூறியபடி வேதம், உபநிடதம், சிவாகமம் என்பவற்றின் பொருள் முடிபுபற்றிய குழப்பங்களைக் குறிப்பாகவும் வெளிப்படையாகவும் குறித்து நீக்கி உண்மை முடிவை விளக்குதல் உணரத்தக்கது.

இன்னும், இதுகாறும் கூறப்பட்ட வரலாற்றில் முறையில் வைத்து நோக்கும் போது, வேத ஆகமங்கள் முதல் நூல்கள் எனப்படினும், சித்தாந்த சைவத்தின் வரம்பைத் தெளிய உணர்தற்குப் பன்னிரு திருமுறைகளும், பதினான்கு மெய்கண்ட நூல்களுமே சிறந்த கருவிகளாய் அமையும் மிக உயர்ந்த பிரமாண நூல்கள் ஆம் என்பது விளங்கும். அவற்றுள், பன்னிரு திருமுறைகள் நெறிப்பட்டு ஒழுகி உய்ய விரும்புவோர்க்கு நேரே எளிதின் உபகாரப்பட்டுப் போக மோக்ஷங்களை எய்துவிப்பன. மற்றைய மெய்கண்ட நூல்கள் தத்துவக் கொள்கையைக் கூறு முகத்தான் நன்னெறியை இதுதான் என ஐயத்தின் நீங்கித் தெளியுமாறு உபகரிப்பன

ஆகும். இவ்விருவகை நூல்களும் தமக்குள் முரணுதலின்றி (without internal contradiction) தன்னிறைவு உள்ளனவாய் (self-sufficient) செம்பொருட்காட்சிக்கு இன்றியமையாத திருவருட் சுடர்களாகத் திகழ்வன ஆம்.

## அடிப்படைக் கொள்கைகள்

[இத்தொடர் சென்னைச் சைவ சித்தாந்த மகாசமாஜத்தின் அடிப்படை உண்மைகளிலிருந்து எழுதப்படுகிறது. இது 1930-ல் திருப்பாதிரிப்பூலியூரில் நடைபெற்ற சைவர் பேரவையில், ஸ்ரீலஸ்ரீஞானியார் சுவாமிகளும், ஆசிரியர் மறைமலையடிகளும் எடுத்துக் கூறப் பேரவையினர் ஏற்றுக்கொண்டது.]

1. **பிரமாண நூல்கள்**. - பன்னிரு திருமுறைகளும் பதினான்கு சாத்திரங்களும், இவற்றோடு மாறுபடாத வேத ஆகமப் பகுதிகளும் பிரமாண நூல்கள் ஆகும்.

இவற்றின் வழிவந்து பொருள் முடிபு மாறுபடாத பிற நூல்களும் தழுவிக் கொள்ளப்படும்.

2. **இருவகை ஆசிரியன்மார்கள்** - ஆசிரியன்மார்கள் சைவ சமய குரவர்கள் எனவும், சைவ சந்தான குரவர்கள் எனவும் இரு திறப்படுவர்.

(க) திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், நம்பிஆரூரர், மாணிக்கவாசகர் என்னும் நாலவரும் சைவ சமய குரவர்கள் ஆவார்கள்.

இவர்கள் தம் அருள் வாழ்க்கையாலும், வாய்மொழிகளாலும், அற்புதங்களாலும் சைவ சமயமே மெய்ச்சமயம் என விளக்கியருளினவர்கள்.

(உ) மெய்கண்ட தேவர், அருணந்தி சிவனார், மறைஞான சம்பந்தர், உமாபதிசிவனார் என்னும் நால்வரும் திருக்கயிலாய பரம்பரைச் சந்தான குரவர்கள் எனப்படுவார்கள்.

இவர்கள் சிவபிரான் முதலாக, ஆசாரிய மாணாக்க முறையில் இடையறவுபடாத உபதேசக் கிரமத்தைப் பெற்று இவ்வுலகிற்குக் கொடுத்தருளியவர்கள். மேலும், சிவகாம ஞானபாதங்களால் விரித்துக் கூறப்படும் வேதங்களின் ஞானகாண்டப் பொருள் முடிபுகலைச் சுருக்கி விளக்கும் சித்தாந்த சாத்திரங்களைச் செந்தமிழ் மொழியில் அருளிச்செய்து உபகரித்தவர்கள். இவர்களுள் மறைஞானசம்பந்தர் செய்ததாக நூல் ஒன்றும் இல்லை. இக்காலத்து, ‘சதமணிக் கோவை’ யை இவர் இயற்றியது எனக்கருதுவோர் உளர்.

3. **முடிநிலை உண்மனிபொருள்கள்** (Ultimate realities) இறை, உயிர், தலை என்னும் மூன்றும் தோற்றம் ஈறின்றி என்றும் உள்ள பொருள்கள். இவை முறையே பதி, பசு, பாசம் எனக் கூறப்படும்.

சான்றவர் ஆய்ந்திடத் தக்க வாம்பொருள்
மூன்றுள; மறையெலாம் மொழிய நின்றன;
ஆன்றதோர் தொல்பதி ஆரு யிர்த்தொகை
வான்திகழ் தளையென வகுப்பர் அன்னவே

என்பது கந்தபுராணம்.

4. **முப்பொருள்களுக்கிடையே உள்ள சம்பந்தம்**. - இங்குக் கூறிய முப்பொருள்களுள், இறை இயற்கை முற்றுணர்வுடையது ஏனைய இரு பொருள்களையும் தன் ஆற்றலின் அடங்கக்கொண்டு தொழிற்படுத்துவது. அஃது ஒன்றே, பல அன்று.

உயிர் பல, உணர்த்த உணரும் செயற்கையுணர்வு உடையதுனானை இரண்டையும் தலைப்பட்டு அறிந்து அநுபவிப்பது.

தளை ஆணவம், கன்மம், மாயை என மூவகைப்படும். இவை உயிர்களின் ஆற்றலைத் தடைசெய்து துன்புறுத்தும் சடப்பொருள்கள் ஆம். உயிர்களின் பிறப்பு நிலைக்கு இவையே காரணமாக உள்ளவை, சடம் - அறிவில்லது.

5. **உயிர்களின் இருநிலை** : உயிர்களுக்குப் பிறப்பு நிலை, வீட்டு இலை என இரு நிலைகள் உண்டு. அவை தளைவயப்பட்டுப் பிறந்து இறந்து உழலும் நிலை பிறப்பு நிலை எனப்படும். பந்தம், பெத்தம், பிறப்பு, கட்டு என்பவை ஒரு பொருளையுடைய சொற்கள்.

இறை திருவருளால், அவை தளையின் பிடிப்பிலிருந்து விடுபட்டு, இறையை அணைந்து, தூயபேரின்பத்தை அநுபவிக்கும் நிலை வீட்டுநிலை எனப்படும். இது முத்தி நிலை எனவும் பேரா இயற்கை எனவும் வழங்கும்.

இறை, உயிர்க்கு உறவாக நின்று என்றும் உபகரிக்கும் பொருள்; தலை பிறப்பு நிலையில் உயிர்களைப் பந்தத்துக்கு உட்படுத்தி நின்று வீட்டு நிலையில், தன் சக்தி மடங்கி, அடங்கி நிற்கும் பகைப் பொருள்.

உயிர்களும் தளைகளும், பந்தம் வீடு எனப்பட்ட இருநிலைகள் பற்றி மேற்கூறியபடி, தம் இயல்பு வேறுபடுவன. இறை அவ்வாறு நிலை வேறுபாடு இல்லாது உள்ள செம்பொருள். ஆதல்பற்றி அது சத்து எனப்படும். “பந்தமும் வீடும் ஆய பதபதார்த்தங்கள் அல்லான்” என்பது சிவஞான சித்தியில் உள்ள தொடர்.

"அநாதி முத்த சித்துருவாகிய எந்தை கட்டு வீடு என்னும் பதங்களையுடைய பசு பாச பதார்த்தங்களது இயல்புடையன் அல்லன்" "பதம் - அவ்வச்செவ்வி" - என்பவை அத்தொடரின் உரைப்பகுதிகள்.

இங்ஙனம் விளக்கப்பட்ட முப்பொருள்களும் ஒன்றிலிருந்து பிறிதொன்று தோன்றியது எனவோ, ஒன்று மற்றொன்றாக மாறும் எனவோ கூறப்படாத அநாதி நித்தியப்பொருள்கள்.

இங்குக் கூறிய அடிப்படை உண்மையை மனத்துக்கொண்டு மறவாது நினைதர்குப் பின்வரும் திருஞானசம்பந்தர் திருவாக்குத் துணைபுரியும்: -

"விளையாததொர் பரிசில்வரு பசுபாசவே தனையொண்
தளையாயின தவிரவ்வருள் தலைவன்னது சார்வாம்"

இதன் பொருள்: தோற்றம் இல்லாத தன்மையில் வரும் பசு (உயிர்), பாசம், வேதனை, ஒண்தளை என்னும் மூவகைப் பந்தத்திலிருந்து வீடுபட்டு உய்யும்படி அருள்புரியும் முதல்வனது இடம் (முதுகுன்றம்) ஆகும்.

பாசம் - ஆணவம், வேதனை - வேதனைக்குக் காரணமாகிய கன்மம். ஒண்தனை - உயிரின் அறிவைச் சிறிதே விளக்கும் தளையாகிய மாயை.

உயிர் அநாதி பாசபந்தம் உடையதாதல் பற்றிப் பசு எனப்பட்டது. பச் - பந்தித்தல், உ - செயப்படு பொருள் விகுதி, பாசம் - கட்டும்கருவி. பச் - கட்டுதல், அ - கருவிப்பொருள் விகுதி. பசுக்களைப் பாசத்திலிருந்து விடுவித்துக் காத்தல்பற்றி முதல்வன் பதி எனப்படுகிறான். பதி - காக்கிறவன். பா - காத்தல், தி - வினைமுதற் பொருள் விகுதி.

## முப்பொருள் இயல்பு

1. **முதல்வன் இயல்பு** - முதல்வன் தூய அறிவே வடிவாய் என்றும் உள்ளவன்; உயிர்கள் சுட்டறிவைக் கடந்து நிற்றலின் கடவுள் எனப் பேசப்படுகின்றான். தானே எல்லாம் உணரும் இயற்கை முற்றுணர்வு உடையவன். பசு பாசங்களைத் தன் வியாபகத்தில் அடங்கக்கொண்டு தொழிற்படுத்துகின்றவன், இவ்வாறு உயிர்களையும் உலகையும் இடமாகக்கொள்ளுதலினால் இறைவன் எனக் கூறப்படுகிறான். இறுத்தல் - தங்குதல், அவற்றைத் தொழிற்படுத்துதல் பற்றி இயவுள் என உரைக்கப்படுகிறான். உயிர்க்கு உயிராய் நின்று உயிர்களின் உணர்வைத் தடுத்து நிற்கும் பாசத்தடையை நீக்கி, அவற்றின் அறிவு செயல்களை விளக்கி வளர்த்து வருதல் பற்றி அம்மையப்பர் எனவும், உணர்வின்தமி (உயிர்களின் உணர்வுக்கு முதல்வன்) எனவும் கூறப்படுகின்றான்.

காணப்படும் எவ்வகைப் பொருளுக்கும் முற்பட்ட பொருளாய், அவையெல்லாவற்றுக்கும் முடிந்த சார்பாய் நின்று, அவற்றைத் தொழிற்படுத்துவோன் ஆதல்பற்றி முதல்வன் எனவும், ஆதி எனவும், தலைவன் எனவும் ஓதப்படுகின்றான்.

2. முதல்வன், சிவம் சத்தி என ஈரியல்புடையனாதல் - சூரியன், பூமி முதலிய பொருள்களுக்கு ஈர்ப்புச்சத்தி (gravitational force) உண்டு என்பதை அறிவோம். ஆனால் அச்சத்தியை நாம் காணவில்லை. அச்சத்தியின் வயப்பட்டுச் சூழலும் கோள்கள் உபகோள்கள் என்பவற்றின் இயக்கங்களைக் கண்டுதான் ஈர்ப்புச் சத்தியின் உண்மையினையும் அதன் இயல்புனையும் கருதி உணர்கிறோம். முதல்வன் சத்தியை (இதுபோலவே) நாம் காண்பதில்லை. ஆனால், முதல்வனது சத்தி வயப்பட்டு நடக்கும் பசுபாசங்களின் தொழிற்பாடு பற்றி அச்சத்தியின் உண்மையினையும் இயல்பினையும் கருதி உணரவேண்டும். ஞாயிற்றைப்போல முதல்வன் உளன். அதன் ஈர்ப்புச் சத்தியைப்போல முதல்வனது சத்தி உள்ளது. சத்தி என்னும் சொற்குப் பொருள் வல்லமை அல்லது ஆற்றல் என்பது ஆகும்.

ஒரு பொருள் பிறிதொரு பொருளைத் தன்வயப்படுத்தி நடத்தும் இடங்களில் எல்லாம் அகப்பொருள் இருதன்மைப்பட்டு இயைந்து நிற்கும். அதாவது, தானும், தன் சத்தியும் என இருதன்மைப்பட்ட ஒரு பொருளாய் நிற்கும். மேற்காட்டிய உதாரணங்களில் ஞாயிறு தனக்கு வேறாகிய கோள்களை (நிலம், செவ்வாய், புதன், முதலியவற்றை)த் தன்வயப்படுத்தித் தன்னைச்சுற்றிச் சுழன்று வரச் செய்கின்றது. ஆதலினால், அது ஞாயிறு எனவும், ஞாயிற்றின் ஈர்ப்புச்சத்தி எனவும் இருதன்மைப்பட்ட ஒரு பொருளாய் உள்ளது. இதுபோலவே முதல்வன் தானும் தன் சத்தியும் என இருதன்மைப்பட நின்று உயிர் உலகுகளைத் தன் வயப்படுத்தி நடாத்துகிறான் என ஞான நூல்கள் கூறுகின்றன.

உலகத்துப் பொருள்கள் எல்லாம் மூன்றுவகைப்படும் நிலை வேறுபாடுகளை உடையன. ஒருகாலத்து உருப்பெற்றுத் தோன்றுதலும், தோன்றி நிற்றலும், பின் ஒருகாலத்து உருக் குலைந்து பயன்படாது மறைதலும் உலகப் பொருள்களின் பொதுவியல்பாகக் காணப்படுகின்றன. இவ்வாறே உயிர்களும், உடம்போடு கூடிப்பிறத்தலும், பிறந்து உடல் வளர்ச்சி, உணர்வு வளர்ச்சி என்பவற்றை முறை முறையே பெற்றுத் தொழிற்பட்டு, இன்பத் துன்பங்களை துகர்ந்து பின் ஒருகாலத்து உடம்பு தன் நிலைகுலைதலால் அதனை விட்டிறத்தலும் புரிகின்றன. இன்னும் உடம்போடு கூடிவாழுங்காலத்திற் கூட, அன்றாடம் தனவு, கனவு, உறக்கம் என்னும் உணர்வு நிலைகள் மாறி மாறி நிகழப்பெற்று வருகின்றன. இங்ஙனம் உலகு உயிர்களின் மாட்டு நிகழும் செயல்கள் எல்லாம் முதல்வனது விருப்பின்படு, அவனது நினைவு ஆற்றலால் (சத்தி சங்கற்பத்தால்) நிகழ்கின்றன என்பது

மெய்யுணர்ந்த பெருமக்கள் துணிவு ''மன்னுசிவன் சந்நிதியில் மற்றுலகம் சேட்டித்தது என்னும் மறை'' என்பது மெய்கண்ட தேவர் வாய்மொழி.

இதுவரையில் கூறியிதிலிருந்து பின்வரும் முடிபு உணரப்படும். முதல்வன் தனக்கு வேறாகிய உலகு உயிகளோடு கலந்து தொழிற்படுத்தும் நிலையில் சத்தி எனப்படுகின்றான். அவனுக்கு உலகு உயிரோடு உள்ள தொடர்பைக் கருதாது, முத்தான்மாக்களுக்கு அவன் அனுபவப்படும் தன்மையைக் கருதி அவனை உண்மை அறிவின்பப் பொருளாகக் கருதும்போது சிவம் எனப்படுகிறான். இவ்விரண்டியல்பையும் உடையவன் ஒருவனே இவ்வியல்புகளை உடையவனாய் உலகுயிர்களை ஐவகைத் தொழிலின் அகப்படவைத்து ஆட்சிபுரியும் நிலையில் முதல்வன் பதி எனவும், அம்மையப்பர் எனவும், ஈசுவரன் எனவும் வழங்கப்படுகின்றான்.

முதல்வனது சத்தி திருவருள் எனவும், திருவடி எனவும், சிவ ஞானம் எனவும், அம்மை எனவும் வழங்கும்.

3. **முதல்வனது குணமும் உருவமும்**. - முதல்வனது இயல்பை ஞாயிறு அக்கிய உவமையில் வைத்து விளக்குதல் மரபு. அது பற்றி அவன் தேவசவிதா அல்லது சிவசூரியன் எனப்படுவன்.

ஞாயிற்றின் ஒளியே ஞாயிற்றுக்குக் குணமும் சொரூபமும் ஆகும். ஞாயிற்றால் நாம் எய்தும் பயன்கள் எல்லாம் அதன் கதிர் எனப்படும் ஒளியால்தான். இதுபோலத் திருவருள் எனப்படும் சத்தியே முதல்வனுக்குக் குணமும் சொரூபமும் ஆகும். முதல்வனால் நாம் எய்தும் பயனெல்லாம் சிவசத்தியாலே ஆகும். ஞாயிறு சிவத்துக்கு உவமை. அதன் ஒலி சித்திக்கு உவமை.

உயிர்களாகிய நாம் நமக்கு வேறாகிய பொருள்களைப் பற்றுவதும் அவற்றைத் தொழிற்படுத்துவதும் உடம்பையும் அதன் உறுப்புகளையும் பெற்றே, அன்றியும், ஒரு செயலைச் செய்யும்போது உடம்பு, காணம் (கருவி), இடம்வ் ஆடை, அணி என்பவற்றை அச்செயலுக்குத் தக்கவாறு கொன்டு செய்கிறோம். இதுபோல, முதல்வனுக்கு உடம்பு, காணம், இடம், ஆடை, அணி என்பவையெல்லாம் அவன் திருவருள் எனப்படும் சத்தியும் அதன் கூறுகணாமே ஆகும். நாம் உடம்பு முதலியவற்றை மாயையின் காரியங்களாகப் பெற்றுத் தடைப்படும் அறிவு செயல் உடையேமாய், அவற்றின் வயப்பட்டு நடக்கிறோம். முதல்வன் தனது சத்தியையே உடம்பு முதலியனவாகக் கொண்டு தன்வயம் உடையோனய் எல்லாச் செயலையும் செய்கின்றான்.

இக்காரணத்தால் முதல்வனுக்கு எஞ்ஞான்றும் பிறப்பு இறப்புக்கள் கூறப்படுவதில்லை. அவன் அன்பர்களுக்கு அவ்வப்போது காட்டியருளும் திருவுரு அவன்றன் சத்தியால் அமைந்தது ஆகலின் அது பிறவா யாக்கை எனப்படும்.

4. **திருக்கோயிலில் வைத்து வழிபடப்படும் திருவுருங்கள்**. - திருக்கோயில் முதலிய இடங்களில் முதல்வனுக்கு உரியனவாக வைத்து வழிபடப்படும் திருவுருவங்கள் எல்லாம் ஓரோர் காலத்து அவன் தவமிக்கோர்க்குக் காட்டியருளிய திருவுருங்களே ஆகும். அவை போக வடிவம், யோக வடிவம், கோர வடிவம் என மூவகைப்படும். போக வடிவங்கள் போகத்தை விரும்புவோரால் தியானம் பூசை முதலியவை செய்தற்கு உரியவை. ஞான யோகத்தை விரும்புவோர் வழிபடுவதற்கு உரியவை யோக வடிவங்கள். பகைவராலும் நோயாலும் நலிந்தோர் வழிபட்டு வினைநீக்கம் பெறுதற்கு உரியவை கோர வடிவங்கள்.

"உருவருள், குணங்க ளோடும் உணர்வருள் உருவிலி தோன்றும்
கருமமும் அருள், அரன்றன் கரசரணாதி சாங்கம்
தரும்அருள், உபாங்கம் எல்லாம் தானருள், தன்கொன்றின்றி
அருளுரு உயிருக் கென்றே ஆக்கினன் அசிந்தன் அன்றே"

"போகியாய் இருந்துயிர்க்குப் போகத்தைப் புரிதல் ஓரார்,
யோகியாய் யோக முத்தி உதவுத லதுவும் ஓரார்,
வேகியா னாற்போல் செய்த வினையினை வீட்டல் ஓரார்,
ஊகியா மூடரெல்லாம் உம்பரின் ஒருவன் என்பர். "

என்பவை சிவஞான சித்தியாரில் வரும் பாட்டுக்கள்.

"மாயை காரிய உருக்களும் எம்பிரான் வடிவம்
ஆயவேல் அவை அருள்மயம் ஆகும்"

என்பது காஞ்சிப்புராணம்.

5. **முதல்வன் இயற்றும் தொழில்**. - முதல்வன் சத்தியோடு இயைந்து நின்று சங்கற்ப மாத்திரையால் (அருள் நினைவினாலே) உலகுயிர்களைத் தொழிற்படுத்துவன் என்பது மேலே கூறப்பட்டது. அத்தொழிற்பாட்டை ஐந்து வகையாக உணர்ந்து உளம் பற்றவேண்டும் என்பது சைவ நூல் மரபு. ஆகவே முதல்வன் தொழில் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என ஐந்தாக வைத்து ஓதப்படும். இவை வடமொழியில் முறையே சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம் என்று கூறப்படும்.

படைத்த்லாவது உடம்பு, மனம் முதலிய கருவி, உலகம், நுகர்ச்சிப் பொருள் (புவனபோகம்) என்பவற்றை அவ்வவற்றின் முதற்காரணத்தினின்றும் தோன்றச் செய்தல் காத்தல் அவ்வாறு தோன்றிய பொருள்களை உயிர்களுக்கு உபகாரப்பட வைத்தல், அழித்தலாவது அங்ஙனம் உபகாரப்பட்ட பொருள்களை மீளவும் அவ்வவற்றின் முதற்காரண ரூபத்தில் மறையச் செய்தல். இம்மூன்று தொழில்களும் அறிவில் பொருள்களாய்ப் புடைபெயர்ச்சியுள்ள சடப்பொருள்களில் நிகழ்வன (சடம் - அறிவில்லது). சடப் பொருள்கள் எல்லாவற்றுக்கும் முடிந்த ஆதிமுதற்காரணமாயுள்ள பொருளே மாயை எனப்படும். ‘‘மாயையைப் பிரகிருதி என அறிக, மாயையை யுடையவனை மகேசுவரன் என அறிக’’ என்னும் சுவேதாச்சுவதா சுருதி இதற்குப் பிரமாணம். இங்குப் பிரகிருதி என்றது முதற்காரணம் என்னும் பொருளை உடையது.

இனி, மறைத்தலாவது உயிர்கள் வீடு பெறுந் தகுதியைப் பெறுதற்பொருட்டு அவற்றைத் தனைகளின் வழிச்செல்லும்படி நடத்துதல்; இதனால் உயிர்கள் முதல்வனது உபகாரத்தைப் (அறியாதே) பெற்றுவ் பாசசக்தி மெலிய அறிவு வளர்ச்சியுற்று வரும். இக் கருத்தைப் ‘‘பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே’’ என்னும் திருவாசகத்தால் உணரலாம். இங்குப் பாரித்தல் - வளர்த்தல். அஃதாவது அறிவை வளர்த்து வருதல். அருளலாவது பக்குவமுதிர்ச்சி எய்திய ஆன்மாக்களைப் பாசங்களிலிருந்து விடுதலைசெய்து, அவை, தன்னைத் தலைப்பட்டு உணர்ந்து பேரின்பம் பெற்றுய்யச் செய்தல், மறைத்தல், அருளல் என்னும் இரண்டும் உயிரின்கண் நிகழ்வன மறைத்தல் என்பது பாசங்களுக்கே உள்ள செயல். ஆயினும், நோயற்ற ஒருவனுக்கு மருத்துவன் அந்நோயின் தன்மைக்கு ஏற்றபடி மருந்து முதலியவற்றைக் கொடுத்து அடைவே நீக்குதல் போல, முதல்வன் மலசத்திகளை உருவு திரியச்செய்து உயிர்களை அறிவாற்றல்களில் சிறக்குமாறு வளர்த்து வருதல்பற்றி, முதல்வனது இவ்வுபகாரம் மறைத்தல் என உபசார வழக்குப் பற்றிக் கூறப்படும்.

6. **முத்தொழில், ஐந்தொழில், இருதொழில் என்பவற்றின் கருத்தொருமை**. - நூல்கள் முதல்வன் தொழிலை முத்தொழில் எனவும், இருதொழில் எனவும் சிற்சில இடங்களில் கூறும். மேலே விளக்கிய ஐந்தொழில்களில் மறைத்தல் என்பது காத்தல் என்னும் தொழில் நிகழும்போது உயிர்களிடத்து உடன் நிகழ்வது. ஆதலின், அது காத்தலின்கண் அடங்கும். அருளல் என்பது மல சத்திகளிலிருந்து விடுபட்ட சுத்த ஆன்மாக்களைத் தன்கண் அடங்கி நின்று இன்புறச் செய்தலே ஆகும். ‘‘சேர்வார் தாமே தான் ஆகச் செயுமவன்’’ என்பது ஆளுடைய பிள்ளையார் திருப்பாட்டு. ஆதலினால் அருளல் என்பது அழித்தலில் அடங்கும். அடங்குதல்பற்றி, மெய்ந்நூல்கள் முதல்வன் தொழிலைப் படைத்தல், காத்தல், அழித்தல் என மூன்றாகவே வைத்துக் கூறும். ‘‘படைத்துங் காத்துங் காந்தும் விளையாடி.’’

(திருவாசகம்), ‘‘மூன்று மூர்த்தியுள் நின்றிப் லுந்தொழில் - மூன்றும் ஆயின மூவிலைச் சூலத்தன்’’ (திருநாவுக்கரசர்) என்றாற் போன்ற திருவாக்குக்களுக்கு இதுவே கருத்தாம், இனி, படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் மூன்றும் உயிர்களைப் பாசநெறியுய்ப்பனவே ஆதலின், அவை மூன்றையும் மறைத்தலின்கண் அடக்கி, இறைவன் தொழிலை மறைத்தல், அருளல் என இரண்டாகவே வைத்து உரைத்தலும் உண்டு. ‘‘இரண்டும் ஆமவர்க்கு உள்ளன செய் தொழில்’’ (திருநாவுக்கரசர்) எனவும், ‘‘பந்தம் வீடுதரும் பரமன்’’ (பெரியபுராணம்) எனவும் எழுந்த திருவாக்குகளுக்கு இது கருத்தாம். ஆகவே, எல்லா மெய்ந்நூகளுக்கும் முதல்வனது தொழிலை ஐந்தாக விரித்து ஓதுதலே கருத்தென்பது உணரப்படும்.

கிருஷ்ணயசுர்வேதம், தைத்திரீய ஆரண்யகம் 17-ஆம் அநுவாகம் முதல் 21-ஆம் அநுவாகம் வரையுள்ள மந்திரங்களில் முறையே வரும் சத்யோஜாதம், வாமதேவம், அகோரம், தத்புருஷம், ஈசானம் என்னும் ஐந்து மந்திரங்களும் மேற்கூறிய படைத்தல் முதலிய ஐந்தொழில்களைச் செய்யும் முதல்வனது சத்தி பேதங்களைக் குறிப்பனவாம் என்பது சிவகாம நூற்றுணிபு. சத்தியோஜாதம் - படைப்பு, வாமதேவம் - காப்பு, அகோரம் - அழிப்பு, தற்புருஷம் - மறைப்பு, ஈசானம் - அருளல்.

## எண்குணங்கள்

தன்வயமுடைமை, தூய உடம்புடைமை, இயற்கையறிவுடைமை, முற்றறிவுடைமை, இயல்பாகவே பாசங்களின் நீங்கி நிற்றல், பேரருள் உடைமை, முடிவில் ஆற்றலுடைமை, வரம்பில் இன்பம் உடைமை என்னும் இவை முதல்வனுக்குரிய இறைமைக் குணங்கள் எனச் சைவாகமங்கள் கூறும் திருக்குறளில் முதல்வனை எண் குணத்தான் எனக் குறித்துள்ளவிடத்து, பரிமேலழகர் இவற்றையே எண்குணங்கள் என எடுத்தோதி, வலியுறுத்துகிறார். பொதுவாக உயிர்களுக்கு உள்ளனவாகக் கூறப்படும் குணங்கள் எல்லாம் மூலப் பிரகிருதியின் காரியமாகிய சத்துவம், இராசதம், தாமதம் என்னும் முக்குணங்களுள் ஒன்றும் இல்லை. ஆதலால் முதல்வன் நிர்க்குணன் (குணம் இல்லாதவன்) எனக் கூறப்படுவன் ஆனால் மேலே கூறிய குணங்கள் ஏவர்தம் பாலும் இனறி எல்லைதீர் அமலற்கு உள்ளவை’ எனக் கூறப்படுவன்.

அவை மூலப் பிரகிருதி, மாயை, விந்து என்னும் இவற்றின் சம்பந்தத்தால் வருவன அல்ல. அவை முதல்வனது இயல்பாகிய திருவருளின் விளக்கங்களே ஆகும். இதனால், முதல்வனை எண் குணத்தான் எனக்கூறுவது நிர்க்குணன் எனக்கூறும் சுருதிகளோடு மாருபடுவதன்று. நிர்க்குணன் என்பதன் பொருள் மூலப் பிரகிருதியின் விளக்கமாகிய முக்குணம் இல்லாதவன் என்பதே ஆகும்.

திருவர்ட்குணங்கள் இல்லாதவன் என்பது அன்று. குணாதீதன் என்னும் சொல்லும் முக்குணங்களைக் கடந்தவன் என்றே பொருள்படும். ஆதலின், அதுவும் எண்குணத்தான் என்பதோடு முரணாது.

மேற்கூறிய எண்குணங்களும் வடமொழியில் முறையே சுவதந்திரதை, விசுதத்தேகம், அநாதிபோதம், சர்வஞ்ஞதை; அநாதிமுத்தத்துவம்; அலுப்த சக்தி, நித்திய திருப்தி எனக்கூறப்படும். அநாதி முத்தத்துவம் என்பதை நிராமயம் (பிணி இன்மை) என்றும் வழங்குவர்.

இவற்றுள் அநாதியே பாசங்களின் நீங்கி நிற்றல் (அநாதி முத்தத்தன்மை), இயற்ஜயுணர்வுடைமை (அநாதிபோதம்)யில் அடங்கும். தூயவுடம்புடைமை (விசுத்ததேகம்) பேரருள் உடைமை (அலுப்த சத்தி) யில் அடங்கும். ஆதலின், எண் குணங்களை ஆறு குணங்களில் அடக்கி, முதல்வனைத் தூய அறு குணன் (சுத்தஷாட் குண்ணியன்) என்றலும் வேதாகம மரபு ஆகும். ‘‘ஏவர்தம் பாலும் இன்றி எல்லைதீர் அமலற்குள்ள - மூவிருகுணனும் சேய்க்கு முகங்களாய் உற்ற தென்ன’’ - என்பது கந்தபுராணம்.

7. **முதல்வனுக்கு உலகத்தோடு உள்ள சம்பந்தம்**. - வேதங்கள் முதல்வனை விச்சுவாதிகன், விச்சுவ காரணன், விச்சுவாந்தரியாமி விச்சுவரூபி என்னும் நான்கு பேர்களாலும் சுட்டுகின்றன. விச்சுவம் என்பது உலகம் என்னும் பொருளது ஆதலினால் இப்பெயர்கள் தமிழில் முறையே உலகினை இறந்து நின்றவன். உலக முதல், உலகினுக்கு உயிர், உலக உருவினன என்று மொழி பெயர்த்துக் கூறப்படும். இவற்றால் உலகுக்கும் முதல்வனுக்கும் உள்ள சம்பந்தம் விளங்கும். இச்சம்பந்தத்தை விளங்கக் கூறின், முதல்வன் உலகத்திற்கு வேறான பொருளாய்ச் சுட்டியறியப்படாது, யார் உணர்வையும் கடந்தவன். ஆயினும், உலகம் அனைத்திற்கும் தான் பரம ஆதாரமாய், அவை தன் பெருநிறைவில் அடங்கித் தொழிற்படும்படி, அவற்றைச் செலுத்தி நிற்பவன். உயிர் உடம்பை அபிமானித்து உடம்பாகவே நின்று இயலுதல் போல, முதல்வன் உலகமே தான் எனும்படி நின்று, உலகப் பொருள்களில் தன்னைக் கருதி வழிபடுவோர்க்கு அவற்றில் தங்கி நின்று வழிபாட்டை ஏற்றுக்கொள்வான் - எனக் கூறலாம்.

இவ்வாறு, முதல்வன் உலகிற்கு வேறாயினும், அதனோடு ஒன்றாய், அதனைச் செலுத்தி உடனாய் நிற்கும் இயல்பையே உபநிடதங்கள் அத்வைதம் அல்லது அத்விதீயம் என்னும் சொல்லால் விளக்குகின்றன. அத்வைதம் என்னும் சொற்குப் பொருள் இரண்டாக இல்லாமை, வேறின்மை எனக் கொள்வதே சைவ மரபு.

சுருதிகள் சிவபிரானை இங்ஙனம் நான்கு வகைப்பட வைத்துக் கூறுகின்றன என்பதையும், அவை சிவபிரானது திருமேனியின் இயல்பை உணர்வார்க்கு விளங்கும் என்பதையும்,

"உலகினை இறந்து நின்ற(து) அரன்உரு என்பதோரரர்,
உலகவன் உருவில் தோன்றி ஒடுங்கிடும் என்றும் ஓரார்,
உலகினுக்கு உயிருமாகி உலகுமாய் நின்ற தோரார்,
உலகினில் ஒருவன் என்பர் உருவினை உணரார் எல்லாம்"

என்னும் சிவஞான சித்தி தெரிவிக்கின்றது.

வேதங்களிற் கூறப்படும் நுண்பொருள்களைப் புராணங்கள் கதை வடிவில் வைத்துப் பருப்பொருள்களாக விளக்கிக் கூறும். சிவபிரான் விச்சுவாதிகள் (விச்வாதிகோ ருத்ரோமஹர்ஷி) என்னும் கருதிப் பொருளை, அவன் சோதிப் பிழம்பாகத் தோன்றி நிற்பத் திருமாலும் பிரமனும் அடிமுடி தேடிக் காணாத வரலாற்றில் வைத்து உரைக்கும். அவன் விச்சுவகாரணன் என்பதை மும்மூர்த்திகளும், பிறரும், பிறவும் முதல்வன் திருமேனியில் தோன்றிய வரலாற்றால் விளக்கும். இறைவன் யோக நிலையில் இருந்தபோது உயிர்கள் எல்லாம் காம நுகர்ச்சி பெறவில்லை எனவும், இறைவன் திருமேனியில் பட்ட அடி உலகம் எல்லாம் பட்டது எனவும், அம்மை முதல்வன் திருக்கண்களை மூட உலகெலாம் இருண்டது எனவும், பின் நெற்றிக் கண்ணால் உலகத்திற்கு ஒளியை முதல்வன் அருளினன் எனவும், இவ்வாறு முதல்வன் திருமேனியில் விளைந்த வண்ணமே உலகிற்கும் நிகழ்ந்தது எனக் கூறும் புராண வசனங்கள் எல்லாம் அவன் விச்சுவாந்தரியாமி என்னும் சுருதியை விளக்கி வலியுறுத்துவன ஆகும். முதல்வனுக்கு உரிய அம்மையப்பர் (அர்த்தநாரீசுவர்) வடிவை எடுத்துக் கூறும் புராண உரைகள் முதல்வன் 'விச்சுவரூபி' என்னும் சுருதிப் பொருளை விளக்கி வலியுறுத்துவன.

இங்ஙனம் நுணுகி உணர்வார்க்குச் சிவ புராணங்கள் எல்லாம் வேதப் பொருளை விளக்கி (வேத உபப்பிருங்கணங்களாய்) முதல்வன் பொருள்சேர் புகழைக் கூறுவனவே ஆம்; புனைந்துரை அல்ல என்பது விளங்கும்.

8. **சொரூப நிலையும் தடத்த நிலையும்**. - தம்மனோர் உணர்வு, தெரிந்ததிலிருந்து தெரியததில் (From the known to the unknown); செல்வது பருப் பொருளிலிருந்து நுண்பொருளுக்குச் செல்வது. (From the concrete to the abstract). உயிர்கள் முதல்வனைப் படிமுறையில் உணர்ந்து மெய்யுணர்வில் நிறைவு நிலை எய்துதற் பொருட்டுச் சிவாகமங்கள் அவன் இயல்பைச் சுவரூபநிலை எனவும் தடத்தநிலை எனவும் இரண்டு வரைப்பட வைத்து உரைக்கும்.

சுவரூபம் என்பது தன்னியல்பு. அதாவது சச்சிதானந்தம் (உண்மை அறிவு இன்பம்) என்னும் வடிவில் மெய்யுணர்ந்தோரால் அநுபவிக்கப்படும் இயல்பு. இவ்வியல்பைக் குறித்து முதல்வனைச் சுட்டும்போதெல்லாம் அவனைச் சிவம், அல்லது சிவன், எனச் சுட்டுவது - ஆகம மரபு.

தடத்தம் என்பது அருகில் இருப்பது, கரைக்கண் இருப்பது எனப் பொருள்படும். தடம் - கரை, ஸ்த - இருத்தல், இதனைத் தமிழ் மொழியில் பொதுவியல்பு என வழங்குவர். பொதுவியல்யானது முதற்பொருள் தனக்கு வேறாகிய உலகு உயிர்களோடு கலந்திருக்கும் தொடர்பு பற்றி அதன்கண் உள்ள இயல்பு. அவ்வியல்பை மூவகைப்பட வைத்துக்கூறுவர். அவை (1) எல்லாப் பொருள்களிலும் உயிர்க்குயிராய் (சர்வாத்தரியாமியாய்)க் கலந்து, ஞானம் கிரியை என்னும் சக்தி ரூபமாய் நிற்கும் நிலை, (2) அவ்வாறு நின்று உலகுயிர்களை ஐந்தொழிலிற்படுத்த முற்படும் நிலை, (3) அவ்வத் தொழிலில் யாதேனும் ஒன்றன்பாற்படுத்தித் தொழிற்படுத்தும் நிலை, இம்மூன்று நிலைகளும் முறையே இலய நிலை, போக நிலை, அதிகார நிலை எனப்படும். இந்நிலைகளை நம்மனோர்க்கு உள்ள உறக்கம், கனவு, நனவு என்னும் நிலைகளைப் போலக் கொள்ளலாம். இந்நிலைகளில் முதல்வனுக்கு உள்ள திருமேனிகள் முறையே அருவம், அருவுருவம், உருவம் எனப்படும். அருவத் திருமேனியைக் குறித்துச் சத்தன், இலயசிவன் எனவும், அருவுருவத் திருமேனியைக் குறித்து உத்தியுத்தன், சதாசிவன் எனவும், உருவத் திருமேனியைக் குறித்துப் பிரவிருத்தன், மகேசன் எனவும் முதல்வனுக்குப் பெயர்கள் வழங்கும்.

முதல்வனுக்கு உரிய இம்மூன்று நிலைகளைப் பின்வரும் எடுத்துக் காட்டில் வைத்து ஒருவாறு உணரலாம். ஒரு செயலைச் செய்வார் முதற்கண் அதனைச் செய்யவேண்டும் என நினைப்பவர். இந்நினைவில் அவருடைய அறிவும் முயற்சியும் பொதுவாக நிகழும், பின் அச்செயலுக்கு வேண்டியவற்றைச் சிறப்பாக அறிதலும் திட்டமிடலும் நிகழும். மூன்றாவதாக அவ்வச் செயற்கூறுகளைத் திட்டத்தின்படி செய்து முடிப்பர். முன்னிலையில் செயலைச் செய்யக் கூடியவராக இருக்கிறார்; செய்யச் சக்தராக இருக்கிறார். இரண்டாம் நிலையில் அவர் செயலில் முற்பட்டு உள்ளார், இதுவே உத்தியுக்த நிலை அலல்து பாலனநிலை. மூன்றாவதாகிய செயலை செய்து முடிக்கும் நிலை அதிகார நிலை. போகம் எனினும் பாலனம் எனினும் பொருந்தும்.

முதல்வனது சொரூப இயல்பும், தடத்த இயல்பும் அவாவறுத்து மெய்யுணர்த்தோருக்குக் காட்சிப்படுவன. ஆயினும், நாம் அவனியல்பை முறையே உருவத் திருமேனி, அருவுருவத் திருமேனி, அருவத் திருமேனி, முடிவில் அவன்றன் அறிவுரு என்னும் படிமுறையில் அறிந்து, அன்பு செய்து வழிபட்டு

நன்னெறியில் முன்னேறக் கடவோம். ஆதலால் சிவாகமங்கள் முதல்வனது உருவத் திருமேனியை இருபத்தைந்து மகேச வடிவம் என வகுத்துக் கூறுகின்றன. அருவுருவத் திருமேனியைப் பீடமும் இலிங்கமும் ஆக அமைந்த சிவலிங்கத் திருமேனி என வைத்துள்ளன. அருவத் திருமேனியைப் பிரணவத்தின் மூலங்களாகிய நாதம், விந்து என்னும் ஒலி, ஒளி வடிவாக வைத்து வருந்துக் கூறுகின்றன. இன்னும் இவற்றின் விரிவு சைவ சாத்திரங்களிலும் சைவ பத்ததிகளிலும் அவற்றின் உரைகளிலும் காணத்தக்கது. இங்கு முதல்வனுக்கு அருவம், அருவுருவம், உருவம் என்னும் மூன்று திருமேனிகள் உள்ளன என அறிதல் சாலும்.

முதல்வன் இயல்பு என்னும் இப்பகுதியை நின்றசீர்நெடுமாறன் என்னும் பாண்டிய மன்னனுக்கு ஆளுடைய பிள்ளையார் அறிவுறுத் தருளியவற்றுள் மூன்று திருப்பாட்டுக்களைக் குறிப்பதோடு முடித்தல் பொருத்தம் ஆகும். -

“அரிய காட்சிய ராய்த் தமது அங்கைசேர்
எரியர் எறுகந் தேறுவர் கண்டமும்
கரியர் காடுறை வாழ்க்கையர்; ஆயினும்
பெரியர்; ஆரறி வாரவர் பெற்றியே”.

(முதல்வன் தன்முனைப்பு உடையார்க்குக் காண அரியவன் அன்பினால் காணலுறுவார்க்கு அங்கையில் நெருப்பும், விடை ஊர்தியும், நீலகண்டமும், சுடலை ஆடலும் முதலிய உண்மையாம் பெரிய நல்ல திருவடையாளங்களையுடைய திருமேனியை உடையன். இத்திருமேனியே யன்றி உலகு உயிர் அனித்தும் தன் வடிவேயாக உள்ள விச்சுவரூபியும் ஆவன் அவன். அவனே யார் உணர்வும் சென்று எட்டொணாத விச்சுவாதிகனும் ஆவன்).

“வெந்த சாம்பல் விரையெனப் பூசியே
தந்தை யாரொடு தாயிலர்; தம்மையே
சிந்தி யாஎழு வார்வினை தீர்ப்பரால்;
எந்தை யாரவர் எவ்வகை யார்கொலோ”.

(முற்றழிப்புக் காலத்தில் எல்லாப் பொருளும் தனது திருவருள் ஒளியால் நீற்றப்பட, அந்த நீற்றைச் சாந்தமாக அணியும் ஊழி முதல்வன் எம்பெருமான்; அவனுக்குப் பிறப்பு இறப்பு இல்லை அவன் தன்னையே சிந்தித்து எழுவார்க்கு இருவினைப்பற்றை அறுத்து மெய்யுணர்வும் பேரின்பமும் தந்தருளுவன். அவனை உலகப் பொருள்களுள் ஒன்றாக வைத்துக் கூறுதல் இயலாது).

“ஏதுக்க ளாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்

சோதிக்க வேண்டா; சுடர்விட்டுளன் எங்கள் சோதி;
மாதுக்கம் நீங்க லுறுவீர் மனம்பற்றி வாழ்மின்;
சாதுக்கள் மிக்கீர் இறையே வந்து சார்மின்களே".

(இறைவன் தனக்கு உவமை இல்லாதவன். ஆதலால் இங்குக் கூறிய அவன் இயல்புகளை ஏது, திருட்டாந்தம் முதலியவற்றைக் கொண்டு அளந்து உளங்கொள்ளுதல் இயலாது. அன்பால் உணர்வார்க்கு அகத்தே பேரறிவ்ய்ப் பொருளாய் விளங்கும் அப்பெருமான் புறத்தும், சிவாக்கினி, சிவலிங்கம் முதலிய ஆதாரங்களில் விளங்கி உயிர்களுக்கு அணுக்கமாக உள்ளவன். ஆதலின் யாம் அறிவுறுத்திய லட்சியத்தைக் குறிக்கொண்டு வழிபட்டு வாழ்ந்து பிறவித்துயர் நீங்கி இன்புறுக; நல்லோர்களே; யாம் விரும்பும் பொருள் எல்லாம் இறைவனே ஆதலால் அவனையே அன்பாற் சார்மின்கள்).

## உயிர் இயல்பு

காணப்படும் உலகப் பொருள்களை இரண்டு கூறாகப் பகுத்து உணரலாம். ஒன்று அறிவுடைப்பொருள், மற்றொன்று அறிவில் பொருள். இவற்றுள் அறிவுடைப்பொருள் என்பது தன் முயற்சி உள்ளதாய், உடம்போடு கூடிப்புலப்படுவதாய் உள்ளது. உடம்புகள் எண்ணில இத்தகைய உடம்புகள்தோறும் வேறு வேறாய் யான் என்னும் உணர்வு வடிவில் நிகழ்வதே (Self consciousness) உயிர் எனப்படுவது.

காணப்படும் உலகம் இயற்கை முற்றுணர்வு உள்ள முதல்வனால் படைக்கப்ப்ட்டு நடைபெறுவதென்பது மெய்யுணர்ந்தோர் துணிபு. ஆதலால் உலகம் பயன்படுவதாக இருத்தல் வேண்டும். உலகில் உள்ள அறிவில் பொருள்கள் பயன்படுவனவேயன்றிப் பயன் கொளவன அல்ல. முதல்வனும் வரம்பில் இன்பம் உடையவன், வேண்டுதல் வேண்டாமை இலாதான். ஆதலால் அவன் உலகப்பொருள்களால் பயன் அடைவான் என்றாலும் பொருந்தாது எனவே, உலகப் பொருள்களால் பயன்கொள்வது உயிரே என்பதும், அஃது உள்ளது என்பதும் விளங்கும் உடம்புகள் எண்ணில் அடங்காதன ஆதல், உயிர்களும் எண்ணில் அடங்காதனவே ஆகும். "வையத்து - இறந்தாரை எண்ணிக்கொண்டற்று" என்னும் திருவள்ளுவர் கருத்தும் சிந்திக்கத்தக்கது.

உயிர்கள் முதல்வனைப்போல அநாதியாக, ஒரு காலத்தில் தோன்றியவை எனப் படாமல், காலத்தைக் கடந்து உள்ள பொருள்களே ஆகும். அவை முதல்வனால் உண்டாக்கப்பட்டன என்றோ, பெருநெருப்பிலிருந்து வெளிவரும் நெருப்புப் பொறிகள் போல முதல்வனிடத்திலிருந்து வெளிப்பட்டவை என்றோ,

கயிற்றில் தோன்றி மறையும் அரவைப்போல முதல்வன் மாட்டு மயக்க உணர்வால் வேறுபட ஏற்றி உணரப்படுபவை என்றோ கொள்ளப்படாதன.

“போற்றி எல்லா உயிர்க்கும் தோற்றமாம் பொற்பாதும்” “போற்றி எல்லா உயிர்க்கும் ஈறாம் இணையடிகள்” என்றாற்போலும் அனுபவ வாக்குகளில் உயிர்கலுக்குத் தோற்ற ஒடுக்கங்கள் கூறப்படுகின்றனவே என்றால், அவை உயிர்கள் உடம்பைப் பெற்றுப் பிறவிக்கு வருவதைக் தோற்றம் எனவும், உடம்பினின்றும் நீங்குதலை ஈறு எனவும் குறிப்பனவே ஆம்; முன் இல்லாத உயிர்கள் பின் தோன்றின் எனவும், தோன்றி நின்ற உயிர்கள் அழியும் எனவும் கூறுவன அல்ல என உணர்தல் வேண்டும்.

இனி முதல்வனுக்கும் உயிர்க்கும் உள்ள வேறுபாடு உணரத்தக்கது. முதல்வன் ஒருவன், உயிர்கள் பல முதல்வன் தானே எல்லாம் அறிந்து அறிவிக்கும் இயற்கை முற்றுணர்வு உடையவன், உயிர்கள் உணர்த்த உணர்வனல் ஒவ்வொரு காலத்து ஒவ்வொரு பொருளையே கட்டி அறிவன. அறியும்போது, மெய், வாய், கண், மூக்கு, செவி, மனம் போன்ற கருவிகளின் உதவியால் பொருள்களின் ஒவ்வோரியல்பையே சுட்டி அறியும். மேலும் முதல்வன் எல்லாப் பொருள்களையும் ஒருங்கே தனித்து நின்று அறிவன்; அதாவது அறியப்படு பொருள்களில் அழுந்தித் தொடக்குறுவதில்லை. ஆனால் உயிர்கள் பொருள்களில் சார்ந்து அவற்றின் வண்ணமாய் நின்றே அறியும். நீர் தான் சார்ந்த நிலத்தின் நிறத்தையும் சுவையையும் பற்றி அவற்றையே தன் இயல்பாகக்கொண்டு புலப்படும். அதுபோல உயிர்களும் தாம் சார்ந்த பாசரீரம், சூக்கும் சரீரம், தூல சரீரம், அவ்வப்போது அறியும் பொருள்கள், என்னும் இவற்றின் இயல்பைப்பற்றி, அது அதுவே தானாக நின்று, வேறு வேறு அவத்தைகளை (உறக்கம், கனவு, நனவு) உறுதலும், இன்பத்துன்ப மயக்கம் என்னும் வேதனை உறுதலும் செய்யும். இக்காரணத்தால் முதல்வன் பற்றற்றான் எனப்படுவன். உயிர்கள் பற்றுவன் ஆகும்.

[1. சரீரங்களின் இயல்பும் அவத்தைகள் இயல்பும் தளையியல் உணர்த்தும்போது விளக்கப்படும்.]

சுருங்கக்கூறின், இயல்பாகவே பாசங்களின் நிங்கி நிற்றல் முதல்வனுக்கு இலக்கணம் இயல்பாகவே பாசங்களிற் கட்டுண்டு நிற்றல் உயிர்களுக்கு இலக்கணம்; ஆதலினால், முதல்வன் அநாதித் தலைவன் ஆவன், உயிர்கள் அநாதியே அவனுக்கு அடிமை ஆகும். “மீளா அடிமை உனக்கே” என்னும் நம்பி ஆரூரர் திருவாக்கும், “என்று நீ அன்று நான் உன் அடிமை யல்லவோ?” என்னும் தாயுமானவர் வாய்மொழியும் கருதத்தக்கன.

எல்லா உயிர்கலும் அறியாமையை உடையவாதலும், அவ்வறியாமை சிறிது சிறிதாக உயிர்கள் எல்லாவற்றுக்கும் நீங்கி வருதலும் கண்கூடு. அறியாமை

உய்ரிகளுக்கு இயற்கை அன்று. அது ஆணவம் என்னும் இயற்கை மலத்தால் உயிர்களுக்கு உள்ள செயற்கை ஆகும். உடம்போடு கூடி உலகத்தில் வாழ்ந்துவரும் பிறப்பு நிலையில், உடம்பு உலகும் அணிவறியாமையை நீக்கி அறிவை வளர்த்து வருவனவாக உள்ளன. இவ்வாறு அறியாமையினையும், முறையே வளர்ந்து வரும் சிற்றறிவு சிறுதொழில் என்பவற்றையும் உடையனவாய், யான் எனது என்னும் செருக்கோடுகூடி வினைகளைச் செய்து அவற்றின் பயன்களை முதல்வன் ஆணையால் பெற்றுவருவனவே உயிர்கள்.

உயிர்கள் வினைக்கு ஈடாக எடுக்கும் பிறப்புக்கள் நால்வகைத் தோற்றத்தையும், எழுவகைப் பிறப்பையும் எண்பத்துநான்கு நூறாயிர யோனி பேதத்தையும் உடையவை ஆகும்.

நால்வகைத் தோற்றமாவன அண்டசம், சுவேதசம், உற்பிச்சம், சராயுசம் என்பவையாம். அண்டசம் முட்டையிற்றோன்றுதல், சுவேதசம் - வேர்வையிற்றோன்றுதல். உற்பிச்சம்-வித்து, வேர் கிழங்கு முதலியவைகளை மேற்பிளந்து தோன்றுதல், சராயுசம் கருப் பையில் தோன்றுதல்.

எழுவகைப் பிறப்புக்களாவன தேவர், மக்கள், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்பவை. இவற்றில் முன்னின்றே ஆறும் இயங்கியற் பொருள்கள் எனவும், சங்கமம் எனவும், சரம் எனவும் குறிக்கப்படும். தாவரம் என்பது அசரம் எனவும் நிலையிற் பொருள் எனவும் குறிக்கப்படும்.

தேவர்க்குப் பதினொரு நூறாயிரம், மக்கட்டு ஒன்பது நூறாயிரம், விலங்குகட்குப் பத்து நூறாயிரம் பறவைகட்குப் பத்து நூறாயிரம், ஊர்வனவற்றாக்குப் பதினைந்து நூறாயிரம், நீர் வாழ்வனவற்றுக்குப் பத்து நூறாயிரம், தாவரங்களுக்குப் பத்தொன்பது நூறாயிரம் என மொத்தம் எண்பத்து நான்கு நூறாயிரம் கரு வேறுபாடு (யோனிபேதம்) கூறப்படுகின்றது.

உயிர்கள் இருவினைகளைச் செய்தற்கும், அவற்றின் பயன்களைக் கலந்து நுகர்வதற்கும் இடம் நாம் வாழும் இந்நில உலகமே ஆகும். நல்வினையை மிகுதியும் செய்த உயிர்கள் அதன் பயனாகிய மிகுந்த இன்பத்தை நுகர்வதற்குச் சுவர்க்கம் முதலிய ஒளி உலகங்கள் உள்ளன. தீவினையை மிகுதியும் செய்த உயிர்கள் அதன் பயனாகிய மிகுந்த துன்பத்தை நுகர்வதற்கு நரகு எனப்படும் இருள் உலகங்கள் உள்ளன.

நிலவுலகிற் பிறந்த உயிர்கள் இறக்கும்போது தூல உடம்பு எனப்படும் பருவுடலைத்தான் விடும். இஃது அரவு தன் மேற்றோலை உரித்து விடுதல் போல்வதாகும், ஆதலினால், தூல உடம்பிற்குக் காரணமாக உள்ள சூக்கும உடல் எனப்படும் நுண்ணுடல் அழிவதில்லை. நல்வினை செய்த உயிர்களுக்கு

நுண்ணுடலில் இருந்து பூதசார உடல் எனப்படும் ஒளி உடல் உண்டாகும். அவ்வுடனோடு ஒளி உலகத்திற்சென்று இன்பம் நுகர்ந்து வாழ்த்து மீளவும் நிலவுலகில் வ்ந்து பிறக்கும். தீவினையை மிக்குச் செய்த உயிர்கள் பருவுடம்பை விட்டவுடம் நுண்ணுடலினின்றும் தோன்றும் பூதவுடம்பு எனப்படும் யாதானா உடலைப் பொருந்தி இருள் உலகிற் சென்று நுன்பம் நுகர்ந்து வாழ்ந்து மீளவந்து பிறக்கும். இவ்வாறன்றி, உயிர்கள் பருவுடம்பை விட்டதும் நிலவுலகிற்றானே ஒரு கருவிற்பட்டு வேறொரு பருவுடம்பை எடுப்பதும் உண்டு.

நிலவுலகில் மறு பிறப்பு எடுக்கும் போது, முன் உடம்பு இறக்கும்போது அவ்வவ்வுயிர் செய்த வினை அவ்வவற்றின் மனக்கண்முன் எவ்வடிவைத் தோற்றுவித்ததோ அவ்வடிவத்திற்குரிய கருவில் அம்மனம் தள்ள விழுந்து அப்பிறப்பையே எடுக்கும் என்பது நியதி.

> ‘‘உறங்கு வதுபோலும் சாக்காடு; உறங்கி
> விழிப்பதுபோலும் பிறப்பு’’
>
> - திருக்குறள்.

> ‘‘மரிக்கும் போது உன்னும் வடிவினை ஆவி
> பரிக்கும் நினைவு பரித்து’’
>
> - சோமவாரகற்பம்.

என்பவை கருதத்தக்கவை.

எழுவகைப் பிறப்புக்களுள்ளும் மக்கட்பிறப்பே சிறந்தது ஏனென்றால், அதுவே, நாம் தம் தலைவனாகிய முதல்வனை அறிந்து வழிபட்டு வீடுபேறெய்துதற்குச் சிறந்த கருவியாக உள்ளது.

## மூவகை உயிர்கள்

உயிர்க்ளைப் பந்தித்து நிற்கும் தளைகள் ஆணவம், கன்மம், மாயை என மூன்றாம் என்பது, முன் அடிப்படை உண்மைகளைக் குறித்தபோது கூறப்பட்டது. அவற்றுள் ஆணவத்தால் மட்டும் கட்டுற்றுப் பிறவற்றால் தாக்குண்ணாதவர் உளர், அவரை ஒரு மனத்தார் எனவும் விஞ்ஞானாகலர் எனவும் குறிப்பிடுவர். ஆணவம், கன்மம் என்னும் இரண்டின் வயப்பட்டு மாயையைக் கடந்தோறும் உளர். அவர் இருமலத்தார் அல்லது பிரளயாகலர் எனப்படுவர். மும்மலத்தாலும் கட்டுற்று மய்ங்கும் தம்மனோர் எல்லோரும் சகலர் எனப்படுவர். இங்ஙனம் உயிர் வருக்கத்தை மூன்று வகைப்பட வைத்துக் கூறுவது சைவ மரபு ஆகும்.

> ‘‘மூவகை யெனுந்தளை மூழ்கி யுற்றிடும்
> ஆவிகள் உலப்பில; அனாதி உள்ளன;

தீவினை நல்வினைத் திறத்தின் வன்மையால்
ஓவற முறைமுறை உதித்து மாயுமே''

என்னும் கந்தபுராணம் செய்யுள் உயிரியல்பை நினைவிற் கொள்ளுதற்கு உதவியாக இருக்கும்.

## தளையியல்பு.

பொதுவாக ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்றனையும் உயிர்கலின் தூய்மையை மாற்றிக் துன்புறுத்தும் மாசு எனவும், அவற்றின் அறிவு செயல்கலைத் தடைசெய்யும் தளை எனவும் கூறுவது வழக்கம். இம்மூன்றனோடு மாயேயம். திரோதாயி என்னும் இரண்டனையும் கூட்டித் தளைகளை ஐந்து என்றலும் நூல் வழக்கெ ஆகும். இவற்றின் இயல்பை முறையே சுருங்க ஆராய்வோம். மாசு, மலம், அழுக்கு என்பவை ஒரு பொருளன, பாசம், பந்தம், தளை என்பவை ஒரு பொருளன.

(1) **ஆணவ மலம்**. - ஆணவம் என்பது உயிர்களின் அறிவாற்றலை இல்லை எனும்பரி மறைந்து நிற்பது. நெல்லிற்கு உமியும், செம்பிற்குக்களிம்பும் பின் வந்து வுடின எனப்படாதபடி, அப்பொருள்களுக்கு இயற்க்கைக் குற்றங்களாக இருத்தல் போல, ஆணவம் உயிர்களோடு அநாதியே உடன் கலந்து அவற்றின் வியாபகத்தை விளங்கவொட்டாது தடுத்து அணுத்தன்மை எய்துவிப்பது. இக்காரணம் பற்றி இது மூலமலம், சகஜமலம் என்னும் பெயர்களாலும் குறிக்கப்படும். சகஜம் - இயற்கை, உடன் உள்ளது.

மூலமலம் ஒன்றே. ஆயினும் அஃது உயிர்கள் தோறும் வேறு வேறாக நின்று அவற்றின் அறிவு செயலாற்றல்களைத் தடுத்து நிற்கும் எண்ணிறந்த சத்திகளை உடையது. இச்சத்திகள் உருவு திரிந்து மெலிவு அடைதற்பொருட்டு முதல்வன் இயற்கையே ஆணவ பந்தம் உள்ள உயிர்களுக்கு மாயையின் சம்பந்தத்தை உண்டு பண்ணுகிறான். ஆணவத்தால் முழுவதும் அறிவிழந்து நின்ற உயிர்களுக்குச் சிற்றறிவும் சிறுசெஉஅலும் விளங்குதற் பொருட்டு முதல்வன் மாயையின் சம்பந்தத்தை உண்டு பண்ணுவதுதான் உலகுசிருட்டி எனப்படும். பேரொளி முன் இருந்தாலும் படலம் படர்ந்த கண் ஒளியைப் பற்றாது இருளையே பற்றும். அதுபோல உயிர் எஞ்ஞான்றும் இறைவனுடைய அருளொளியில் மூழ்கி அதில் அடங்கி நிற்பினும், ஆணவம் காரணமாக அருளொளியைப் பற்றாமல், அறியாமையாகிய இருளைப்பற்றி இருளாகவே இருக்கும். இங்ஙனம் ஆணவம் உயிர்களை அறியாமை இருளில் உய்த்தலால், அஃது இருள், அறியாமை, அவித்தை, இருள், மலம் என்னும் பெயர்களாலும் குறிக்கப்படும்.

ஆணவத்தின் இருப்பை உணர்வது எப்படி? புற இருள் எல்லாப் பொருள்களையும் மறைத்தாலும், தன்னை மறைத்துக் கொள்வதில்லை. அதனால் அவ்விருளை நீக்க மக்கள் வழி தேடுகிறார்கள். அக விருளாகிய ஆணவமோ பிற பொருள்களை மறைப்பதோடு தன்னையும் காட்டுவதில்லை. ஆதலால் ஆணவத்தை நீக்கிக் கொள்ள உலகத்தார் முந்துவதில்லை என்கிறார் உமாபதிசிவனார் ஆயினும் அன்றாடம் நம் உணர்வில் தோன்றும் வேறுபாடுகள் பற்றி மூலமலத்தின் தன்மையை ஓரளவு உணர்ந்து கொள்ளலாம். நனவு, கனவு, உறக்கம் என்னும் மூன்று நிலைகள் நமக்கு அன்றாடம் மாறி மாறி நிகழ்கின்றன. கனவு நிலையில் புறக் கருவிகளாகிய மெய், வாய், கண், மூக்கு, செவி, கை, கால் முதலியவை தொழிற்படுவதில்லை. அகக்கருவியாகிய மனம் தொழிற்படுகிறது. உறக்க நிலையில் மனமும் தொழிற்படுவதில்லை. ஆதலால், நனவைவிடக் கனவிலும், கனவைவிட உறக்கத்திலும் நாம் உணர்வுமங்கிக் கிடக்கிறோம். எல்லாக் கருவிகளும் தொழிற்படும் தனவு நிலையில் தம் உணர்வு நன்றாகா விளங்குதலினால் எல்லாப் பொருளையும் இது இன்னது, இது இன்னது என விளங்க அறிந்து செயல் செய்கின்றோம். ஆயினும், 'யான் யார்?' எனத் தன்னை நோக்கி நிற்றற்கு நம் அறிவு ஒருப்படுவதில்லை. இவ்வனுபவத்தில் கனவு உறக்கங்களில் நம் அறிவாற்றலை மறைப்பதும், நனவு நிலையில் தன்னை நோக்காது புறப்பொருள்களை நோக்கி ஓவுமாறு நம் அறிவைத் திருப்புவதும், மூலமலத்தின் செயல்கள் என்று சைவ நூல்கள் கூறுகின்றன.

நம் அறிவை மறைக்கும் செயல் ஆணவத்தின் ஆவாரக சத்தியால் ஆவது எனவும், நனவு நிலையில் நம் உணர்வைத் தன்னை கோக்கவிடாது புறப்பொருளில் சென்று வீழச்செய்யும் செயலை அதன் அதோநியாமிகாசத்தியால் ஆவது எனவும் நூல்கள் பருத்துக் கூறுகின்றன. ஆவாரகம் - மறைப்பு, ஆவாரக சக்தி - மறைக்கும் ஆற்றல், அதோ நியாமிகாசத்தி - கீழ் வீழ்க்கும் சக்தி, அத. - கீழே. திருவள்ளுவர் மூலமலத்தை அதன் ஆவாரக சக்தி பற்றி வழங்கும்போது இருள் என்னும் பெயராலும், அதோ நியாமிகாசத்தி பற்றி வழங்கும்போது மருவி என்னும் பெயராலும், இரண்டும் குறித்து வழங்கும்போது மாசு, செருக்கு என்னும் பெயர்களாலும் வழங்குவர்.

ஆணவமலம் இருள் போன்றது எனவும், உடம்பு முதலியவை விளக்குப்போன்றவை எனவும் உளங்கொள்ளல் வேண்டும்.

(2). **கன்மம்**. - உயிர்கள் உடம்புகளோடு கூடியுள்ள போது மனமொழி மெய்களாற் செய்யும் நல்லனவும் தீயனவும் ஆய செயல்களே கன்மம் எனப்படும். இச்செயல்கள் செய்யப்பட்டு மறையும் போது, செய்வோனுடைய புத்தியில் ஒருவகைப் பழக்கத்தை உண்டுபண்ணி மறையும், அப்பழக்கமே முதல்வனது

ஆணையால் அறம் எனவும், பாவம் எனவும் இருவகைப்பட்டு அப்புத்தியைப் பற்றி நிற்கும். இந்த அறம் பாவங்கள் பின் அப்புத்தி தொழிற்பட்டு ஒன்றனை நிச்சயிக்கும்போது, அந்த நிச்சய ரூபத்தை மாற்றி இன்பத் துன்ப அகர்ச்சையைப் பயக்கும்.

செயல்கள் செய்யப்படும்போது, அவை எதிர் வினை (ஆகாமியம்) எனப்படும். பின் மறைந்து செய்தோனது புத்தியில் பழக்க ரூபமாய் அண்ணிய நிலையில் பற்றி நிற்கும் போது கிடைவினை (சஞ்சிதம்) எனப்படும். கிடைவினையில் பக்குவப்பட்ட பாகம் இன்பத் துன்ப நுகர்ச்சியைப் பயப்பதாய் வெளிப்ப்வெளம் நிலையில் நுகர்வினை (பிராரப்தம்) எனப்படும். ஒருவனுடைய வாழ்க்கைச் சூழ்நிலை, ஆயுள், செல்வம், வறுமை, உயர்வு, தாழ்வு, இன்பத் துன்பம் முதலியவற்றுக்குக் காரணமாய்க் கிடைவினை உள்ளது எனவும், அது பயன்படும்போது ஆதிதைவிகம், ஆத்தியான்மிகம், ஆதிபௌதிகம் என முத்திறப்படும் எனவும் நூல்கள் கூறும். ஆதிபௌதிகம் என்பது அறிவில் பொருள் வாயிலாக வருவது ஆத்தியான்மிகம் அறிவில் பொருளோடு கூடிய உயிர்கள் வாயிலாக வருவது. ஆதிதைவிகம் ஒரு வாயிலான் அன்றித் தெய்வந்தானே காரணமாக வருவது. வாழ்க்கைச் சூழ்நிலைக்குக் காரணமாக இருக்கும் கிடைவினை சனகம் எனப்படும். ஆயுளுக்குக் காரணமாவது தாரகம் எனப்படும். பிறவற்றுக்குக் காரணமாக உள்ளது போக்கியம் எனப்படும்.

(3). **மாயை**. - உயிர்களாகிய நமக்கு, இந்நிலையில் (பிறப்பு நிலையில்) அறியாமையும் அறிவும் ஒன்றோடொன்று மாறுபட்டு நிகழ்ந்து வருகின்றன. அறியாமைக்குக் காரணம் ஆணவம் எனப்படும் மூலமலம் ஆகும் என்பது முன்னர் விளக்கப்பட்டது அவ்வறியாமையை விலக்கி, நம் அறிவை விளக்கி வருவது யாது?

சுருங்கக்கூறின், காணப்படும் உலகமே நம் அறிவை விளக்கி வளர்த்து வருகின்றது எனக் கூறலாம். அது இரண்டு பிரிவாக நின்று, நம் உணர்வை விளக்கியும் பெருக்கியும் வருகின்றது ஒன்று நம் உடம்பு, மற்றொன்று உடம்பின் சூழ்நிலையாகிய (Enviroment) நிலமும் அதன்கண் உள்ள பொருள்களும் ஆகும்.

நம் உடம்பு நம்மைச் சூழ்ந்துள்ள பொருள்களிலிருந்து இடையறாது வரும் ஒலி, ஒலி முதலிய பலவகை அலைவுகளால் (Vibrations) தாக்கப்படுகின்றது. அவ்வலைவுகளின் தாக்குதலை நாம் நம் உடம்பில், மெய் வாய் கன் மூக்குச் செவி என்னும் உறுப்புக்களிலிருக்கும் நரம்பு முனைகளால் உணர்ந்து, அவற்றின் பதிவுகளுக்கு ஏற்றபடி நம்மைச் சூழ்ந்துள்ள பொருள்களை இன்னது இன்னது என உளங்கொண்டு வருகின்றோம். இவ்வாறு, இருட்டில் உள்ள கண்ணுக்குப் பொருள்க்ளைக் காட்டும் விளக்குப்போல, நம் அறிவை விளக்கி வரும் உடம்பும் சூழ்நிலையுமாகிய உலகைத் தனு, கரணம், புவனம், போகம் என நான்கு வகைப்பட

வைத்து விளக்குவஹுட் சைவ நூல் மரபு. தனு உடம்பு (the physical aspect of the body); கரணம் மனம் முதலிய அகக் கருவிகள் (the psychical aspect of the body) புவனம் - உடம்புக்கு ஆதாரமாக உள்ள நிலம் போகம் - நிலத்தில் உள்ள நுகர்ச்சிப் பொருள்கள்.

காணப்படும் பொருள்களெல்லாம் இந்த நான்கு வகையில் ஒன்றாக அடங்கும். இவை அனைத்தும் மாயேயம், என்ற சொல்லால் குறிக்கப்படும். மாயேயம் - மாயையின் காரியம், காணப்படும் பொருள்கள் எல்லாவற்றுக்கும் முடிந்த முதற் காரணமாக (the ultimate substantial cause) உள்ள பொருள் மாயை எனப்படும்.

நாம் கையாளும் சால், காகம், குடம் முதலியனவும், பிறவும், இருந்து வாழும் வீடும் மண்ணாகிய முதற் காரணத்திலிருந்து ஆக்கப்படுகின்றன. இவை தம் உருக்குலைந்து அழியும் போது மண்ணாகவே மாறும். இதுபோல, தனுகாணபுவன போகம் என்பவை மாயையிலிருந்து தோன்றி, அம்மாயையிலே மறைவன ஆகும். மாயா என ஆரியத்தில் வழங்கும் சொல்லே தமிழில் மாயை என ஈறுதிரிந்து வழங்கும். மா - ஒருங்குதல், யா - வருதல்; எல்லாப் புறப்பொருள்களும் எங்கு ஒடுங்கியிருந்து, எங்கிருந்து தோன்றுமோ அந்த அடிப்படைப் பொருளே மாயா அல்லது மாயை எனப்படும்.

இத்தகைய மாயை அறிவில் பொருளாய், அருவாய், சக்தி ரூபமாய், வியாபகமாய், என்றும் உள்ளது ஆகும். இது முதல்வன் திருவருளால் வியாபிக்கப்பட்டு, அவன் திருக்குறிப்பின்படி தன் காரியங்களைத் தோற்றியும் ஒடுக்கியும் வரும்.

> ‘‘விடிவாம் அளவும் விளக்கனைய மாயை
> வடிவாதி கன்மத்து வந்து’’

என்னும் திருவருட்பயன் குறட்பா, மாயையின், இயல்பைக் சுருக்கமாகவும் தெளிவாகவும் விளக்குகின்றது.

‘‘ஞாயிற்றின் தோற்றம் உளதாம் வரையில், விளக்குகள் இருளைச் சிறிது நீக்கிப் பொருள்களைக் கண்களுக்குக் காட்டும். அதுபோல, சிவஞானம் வெளிப்படும் வரையில் மாயையினின்றும் தனு முதலிய காரியங்கள் உயிர்களின் கன்மத்துக்கு ஈடாகத் தோன்றி, உயிர்களோடு கலந்து நின்று, அவற்றின் அறியாமையைச் சிறிது நீக்கி உபகரிக்கும்’’ என்பது இப்பாட்டின் பொருள்.

(4) **மாயையின் வகை**. - மாயை சுத்த மாயை, அகந்த மாயை என இருவகைப்படும். இவற்றுள் சுத்தமாயை மல கன்மங்களோடு விரவாதது. தன்னோடு சம்பந்தப்பட்டுள்ள ஆன்மாக்களுக்கு இன்பம் ஒன்றே பயப்பது; மயக்காது நின்று பேரறிவையும் பேராற்றலையும் உதவுவது. முதல்வன் திருவருள் நேரே பற்றி நின்று தொழிற்படுத்துவதற்கு உரியது. அகந்தமாயை மல கன்மங்களோடு கலந்து நின்று உயிர்களை மயக்கி அறிவிப்பது, இன்பத்துன்ப மயக்கம் என்னும் மூன்றனையும் தருவது.

(5) **சுத்த மாயையின் காரியம்**. - சுத்த மாயையின் காரியம்ம் சொல்லும் பொருளும் என இருவகைப்படும். சொல்லாவது, உயிர்கள் உலகப் பொருள்களை இஃது இன்னது என வேறுபடுத்தி உணரும் சவிகற்ப உணர்வை (conceptual knowledge related to worldly things) பயக்கும் மொழி (language). அஃது எழுத்து சொல், மந்திரம் என மூன்றாக வைத்து எண்ணப்படும். எழுத்து வன்னம் எனப்படும்; சொல், பதம் எனப்படும்.

பொருள் வடிவாகிய காரியம் கலை எனவும், தத்துவம் எனவும் இருவகைப்படும். இவற்றுள் கலை நிவிருத்திகலை, பிரதிட்டாகலை, வித்தியாகலை, சாந்தி கலை, சாந்தியதீத கலை என ஐந்தாம் தத்துவம் நாதம், விந்து, சாதாக்கியம், ஈசுரம், சுத்தவித்தை என ஐந்தாம். இவை சிவதத்துவம் எனப்படும்.

(6) **அசுத்த மாயையின் காரியம்**.- அசுத்த மாயையின் காரியம் வித்தியாதத்துவம், ஆன்மதத்துவம் என இருவகைப்படும். இவற்றுள் வித்தியாதத்துவங்கள் மாயை, காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன் என வழங்கும். ஆன்ம தத்துவங்கள் சித்தம், புத்தி, அகங்காரம், மனம் என்னும் அந்தக்கரணம் நான்கு; மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் அறிவுப்பொறி ஐந்து; வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம் என்னும் தொழிற்பொறி ஐந்து; சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் தன் மாத்திரை ஐந்து; வான், வளி, அனல், புனல், மண் என்னும் பூதம் ஐந்து; ஆக இருபத்து நான்கு ஆகும்.

எனவே, சிவதத்துவம் ஐந்து, வித்தியாதத்துவம் ஏழு, ஆன்ம தத்துவம் இருபத்து நான்கு ஆகச் சைவத்தில் கூறப்படும் தத்துவங்கள் முப்பத்தாறு ஆகும்.

(7). **தத்துவங்களின் தொழிற்பாடு**. - படைப்புக் காலம் முதல் ஊழிக் காலம் வரை தன் தன்மை மாறாது நிலைத்து உள்ள பொருள்கள் தத்துவங்கள் எனப்படும். தத் - அது, துவம் - தன்மை; எனவே தன் தன்மை கெடாதது தத்துவம் என்றபடி.

மேலே கூறியபடி மூவகைப்படும் தத்துவங்களின் செயலைச் சுருக்கமாகக் கூறினால், அவை உயிரை உலக போகத்தில் அழுந்தும்படி செய்வன எனக் கூறலாம்.

உலகியல் அறியாத இளைஞன் ஒருவனுக்குச் சில தோழர்கள் உடனிருந்து உலகியலில் பிரவிருத்தியை உண்டு பண்ணுவது போல், மூலமலங் காரணமாக அறியாமையில் அழுந்தியுள்ள உயிர்க்கு உடனிருந்து அறிவு இச்சை முயற்சிகளை எழுப்பும் கருவிகள் வித்தியாதத்துவங்கள் எனப்பட்டன. இவற்றோடு கூடி உலக முகப்பட்டு உலக நுகர்ச்சியைப் பெறச் சித்தமாக உள்ள நிலையில் உயிர் புருடன் என்ற பெயரால் குறிக்கப்படும்.

இனி உலக நுகர்ச்சியைத் தரும் தத்துவங்களே ஆன்மதத்துவம் எனப்பட்டன. இவற்றின் முதற்காரணம் மூலப் பிரகிருதி ஆகும். மூலப் பிரகிருதி, தன் ஆடை அணி செயல் என்பவற்றால் ஆடவரை மயக்கும் இளமங்கை போன்றது. புருடன் என நிற்கும் உயிர் மூலப் பிரகிருதியை அறிந்து, அழுத்தி, மயங்கி, அதனால் தரப்படும் இன்பம், துன்பம், மயக்கம் என்னும் மூவகை வேதனைகளை மாறி மாறி அனுபவித்து வரும். மூலப் பிரகிருதி தன் காரியங்களாகிய ஆன்ம தத்துவ வடிவத்தில் உயிரைச் சார்ந்து நிற்கும். முதல்வன் திருவருள் இவ்விருவகைத் தத்துவங்களையும் பற்றி இயக்குதற்குக் கருவிகளாக இடை நிற்பனவே சிவ தத்துவங்கள் ஆகும்.

(8). **தத்துவங்களின் விளக்கம்**. - நம் உடம்பில் நிகழும் நிகழ்ச்சிகளை அறிவு என்றும், தொழில் என்றும் இரண்டு பிரிவாகப் பகுத்து உணரலாம். இவ்விரண்டில் அறிவு நிகழ்ச்சி கேட்டல், உறுதல், காண்டல், சுவைத்தல், மோத்தல் என ஐவகைப்பட நிகழ்கின்றது. இவை உடம்பில் உள்ள செவி, தோல், கண், நா, மூக்கு என்னும் ஐந்து உறுப்புக்களில் உள்ள நரம்பு முனைகளால் நிகழ்தலால், இந்நரம்பு முனைகள் அறிவுப் பொறிகள் (ஞானேந்திரியங்கள்) எனப்பட்டன.

இவ்வாறே நம் உடம்பில், தசை நார், மூச்சுப்பை முதலியவற்றின் சுருக்க விரிவுபற்றித் தோன்றும் வினை நிகழ்ச்சிகளை ஐந்து வகையில் அடக்கிக் கூறினார் நம் முன்னோர். அவை உரையாடல், போதல் வருதல், இடுதல் ஏற்றல், மல மூத்திர வெயர்வையைக் கழித்தல், கருவுய்த்தல் அல்லது கோடல் என்பவை. இச்செயல்களுக்குக் கருவியாகவுள்ள உள்நாக்கு, கால், கை, பாயு, உபத்தம் என்பவை தொழிற்பொறிகள் (கன்மேந்திரியம்) எனப்பட்டன.

இனி, அறிவுப் பொறிகளுக்கு எதிர் புலனாகவுள்ள குணங்கள் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என ஐந்தாகப் பிரிந்து நிகழ்கின்றன. இக் குணங்களுக்குப் பற்றுக் கோடாக உள்ள பொருள்கள் மண், நீர், அனல், கால், வான் என இயற்கையில் ஐந்தாகப் பிரிந்து தோன்றுதலால், அவை ஐம்பூதம் எனப்பட்டன. இப்பூதங்களின் நுண்ணிய நிலையே தன் மாத்திரை எனப்பட்டன. தன் மாத்திரை எனினும் சூக்கும பூதம் எனினும் பொருள் ஒன்றே.

மேற்கூறிய நாலைந்து, இருபது கருவிகளை இவ்வாறு மனங் கொள்ளுதல் எளிது.

இவற்றின் மேலாகிய அகக்கருகளாகிய அந்தக்கரணங்கள் பொதுவாக மனம், நெஞ்சு, உள்ளம் முதலிய பெயர்களால் குறிக்கப்பட்டு வழங்கும். இவற்றின் சிறப்பியல்பு யாது என்றால், நமக்குப் பொருள்களைப் பற்றிய முக்கால உணர்வைத் தருவன இவை எனலாம். புறக்கரணங்களாகிய அறிவுப்பொறிகள் நிகழ்காலப் பொருள் ஒன்றனையே அறியும். முக்காலப் பொருளையும் அறிதற்கு அவை கருவியாகா. அதற்கு அகக்கரணங்களே கருவியாகும் என்று உணர்ந்து கொள்ளுதல் வேண்டும்.

அகக்கருவியை மனம் என ஒன்றாகவே வைத்துக் கூறுவது உலகியல் வழக்கு. ஆனால் மெய்ந் நூல்கள் தொழில் வேறுபாடு பற்றி அதை மனம், புத்தி, ஆங்காரம், சித்தம் என நான்காக வகுத்துக் கூறும்.

ஐம்பொறிகளுள் ஒன்றன் வாயிலாக, புறத்தே உள்ளதொரு பொருளைக் காணும்போது, பின்வருமாறு நம் அகத்தே அறிவு தொழிற்படுகின்றது. முதற்கண் அப்பொருளை விரும்பிப் பற்றுதலும், பின் அதனை இன்னது என நிச்சயித்தலும், நிச்சயித்தபின் அதன்கண், ஒன்றுதலும், ஒன்றியுறும்போது இஃது இன்பம், அல்லது இது துன்பம் என அறிந்து அதன்கண் அழுந்துதலும் என நால்வகைச் செயல் நம் அகத்தே நிகழும்.

இங்கு, பொறிவாயிலாக வரும் புறப்பொருளின் பதிவை (Sense impression or perception)ப் பற்றுங் கருவியாக உள்ளது மனம் எனப்படும். அதனை இன்னது என நிச்சயிப்பது புத்தி எனப்படும். அதன்கண் ஒன்றும்படி நம் முயற்சியை எழுப்புவது ஆங்காரம். பின் அழுந்தி இன்பத் துன்ப வேதனை உறுதற்கு எதுவாக நினைவு ரூபமாக நிகழ்வது சித்தம் எனப்படும். இக்கருத்தை

‘அந்தக் கரணம் அடைவே உரைப்பக்கேள்,
அந்தமனம் புத்தியுடன் ஆங்காரம் - சிந்தையிவை
பெற்றியது நிச்சயித்துப் பல்கா லெழுந்திருந்தங்கு
உற்றது சிந்திக்கும் உணர்’

என்னும் உண்மை விளக்கச் செய்யுளால் உணரல் கூடும்.

இங்குக் கூறிய இருபத்து நான்கு தத்துவங்களும், சத்துவம், ராசதம், தாமதம் எனப்படும் மூவகைக் குணங்கள் ஏற்றத் தாழ்வாகக் கலந்து விளங்கும் விளக்கங்களே ஆகும். முக்குணங்கள் பிரிந்து விளங்கித் தோன்றாமல், அரும்பில் உள்ள மணம் போல, அடங்கி நின்ற நிலையே மூலப்பகுதி எனப்படும். உயிர்

மூலப்பிரகிருதியைச் சார்வதால்தான் அதற்குக் காமம் வெகுளி மயக்கம் என்னும் முக்குற்றங்களும் உண்டாகின்றன. மூலப்பிரகிருதி மான் எனவும் வழங்கும்.

மூலப்பிரகிருதியின் காரியம் என மேற்கூறிய இருபத்து நான்கு தத்துவங்களும் வைதிக சமயத்தார் அனைவராலும் கொள்ளப்படுவன ஆகும். ஆனால் சைவத்தில் இவற்றுக்கு மேல், இவற்றிலும் நுண்ணியனவாகப் பன்னிரண்டு தத்துவங்கள் உள எனக் கொள்ளப்படுகின்றன. சைவத்தின்படி மூலப்பிரகிருதி பின் கூறப்படும் கலை என்னும் தத்துவத்தில் தோன்றிய காரியமே ஆகும். அசுத்தி மாயையின் முதற் காரியம் மாயை என்னும் தத்துவம் ஆகும் ஆணவத்தில் அழுந்தி அறிவிழந்து இல்லை யெனும்படி இருந்த உய்ரி இக்காரிய மாயையைப் பொருந்தும்போது தன் அறிவிச்சை செயல், உண்மை மாத்திரையின் விளங்கப்பெற்று, ஒன்றையும் குறிக்கமாட்டாது மயங்கி நிற்கும். தைத்திரீய உபநிடதம் கூறும் ஐங்கோசங்களுள் ஆனந்த மயகோசம் எனப்படுவது இக்காரிய மாயை எனவே சைவத்துட் கொள்ளப்படுகின்றது.

பின், மாயையினின்றும் காலம், நியதி, கலை என்னும் தத்துவங்கள் தோன்றின பின், கலையிலிருந்து வித்தையும், மூலப் பிரகிருதியும், அவற்றுள் வித்தையிலிருந்து அராகமும் தோன்றின. இவற்றுள் கலை ஆணவத்தின் மறைப்பைச் சிறிது நீக்கி உயிரின் முயற்சியை எழுப்பும்; அதனோடு உயிரின் செயலாற்றலை மூலப்பிரகிருதியின் காரியமாகிய அந்தக்காரணங்களைப் பற்றும் படியும் செலுத்தும் அந்நிலையில், கலையின் விருத்தியாகிய வித்தை உயிரின் அறிவாற்றலை விளக்கும். அராகம் உயிரின் விழைவாற்றலை விளக்கும். இங்ஙனம் கலை வித்தை அராகங்களால் உயிர் தன் செயல், அறிவு, இச்சை என்னும் மூவகை ஆற்றலும் விளங்கி உலகப் பொருள்களால் வரும் இன்பத் துன்ப மயக்க நுகர்ச்சியைப் பெறும் தகுதியுடையதாய் நிற்கும் நிலையில், அது புருடன் எனப்படுகிறது. உயிர் புருடனாய் நின்று மூலப் பகுதியால் வரும் முக்குண விளக்கமாகிய இன்பத்துன்ப மயக்கங்களை நுகரும் போது, காலம் அப்போகத்தை இத்துணைக்காலம் நுகர்க என வரையறை செய்யும். நியதி வினைக்கீடாக இன்ன இன்னதையே நுகர்க என நியமிக்கும் இவ்வாறு உயிர்க்கு உடனின்று உதவும் காலம், நியதி, கலை, வித்தை, அராகம் என்னும் ஐந்து தத்துவங்களின் தொகுதியையே தைத்திரீய உபநிடதம் விஞ்ஞானமய கோசம் எனக் குறிக்கின்றது.

மேலே விளக்கப்பட்ட காரிய மாயை முதலிய எழும் உயிரைப் போகம் நுகர்தற்குரிய கருத்தாவாகச்செய்து அந்நுகர்ச்சியில் எழுச்சியைச் தருதலின், இவை போசயித்ரு காண்டம் எனப்படும். எனவே, உயிர்க்குப் புருடனாத்தன்மையை எய்துவிப்பவை வித்தியாதத்துவங்கள் என்பதும், அப்புருடனைப் போக்கியமாய் நின்று மயக்குவன மூலப் பிரகிருதியின் காரிரம் எனப்பட்ட ஆன்ம தத்துவங்கள்

என்பதும் உணரப்படும். போசயிதா-நுகர்வோன் அனுபவிப்போன்; போக்கியம்-நுகரப்படுவது, அனுபவம்.

இனி, இவ்விருவகை முப்பத்தொரு தத்துவங்களைத் தொழிற் படுத்துவனவாய், சுத்தமாயையின் விருத்தியாய், முதல்வனது ஞானக்கிரியா சக்திகளின் நிலைக்களமாய் உள்ள தத்துவங்களே மேலே சிவதத்துவம் எனப்பட்ட ஐந்துமாம், இவை செலுத்தும் கருவிகளாதல் பற்றிப் பிரோக காண்டம் எனப்படும். பிரோகம் - செலுத்துவது. சுத்த மாயை விந்து, குண்டலினி என்னும் பெயர்களாலும் வழங்கும். அசுத்தி மாயை மோகினி எனவும், அதோ மாயை எனவும் வழங்கும்.

(9). **உடம்பின் வகை**. - மேலே விளக்கிய முப்பத்தொரு தத்துவங்களுள் (காரிய) மாயை உயிரின் காரணசரீரம் எனப்படும் ஆனந்த மய கோசம் எனப்படுவது இதுவே.

காலம், நியதி, கலை, வித்தை, அராகம் என்னும் ஐந்தன் தொகுதி கஞ்சுக சரீரம் எனப்படும். விஞ்ஞானமய கோசம் எனப்படுவது இதுவே. (கஞ்சுகம் - சட்டை, இவ்வைந்தும் உயிர்க்குச் சட்டை போல உடன் பொருந்து இருப்பவை).

மூலப்பிரகிருதியின் முக்குணங்களும் விளங்கி நிற்கும் நிலையில், அவ்விளக்க நிலை குணதத்துவம் எனப்படும். சித்தம் என அந்தக்கரணமாக வைத்து உரைக்கப்படுவதும் இதுவே. இது குண சரீரம் மூன்று ஆக இவ்வெட்டுத் தத்துவங்களின் தொகுதி சூக்குமகளையும் அடங்கக் கொண்டிருப்பது ஆகலின், இதுவே மோனமய கோசம் எனப்படுவது.

காரண சரீரம், கஞ்சுக சரீரம், குணசரீரம் என்னும் மூன்றும் சேர்ந்து உயிர்க்கு மிக நெருங்கிய நிலையில் மிக நுட்பமாக அமைந்த கருவிகளாக அமைவன. ஆதலால், இவற்றைத் தொகுத்துப் பரசரீரம் என்னும் ஒரு சொல்லால் கூறுவதும் நூல் வழக்காம். பரம் - அதி நுட்பம்.

இப்பரசரீரத்திற்குமேல், சூக்கும பூதம் எனப்பட்ட தன் மாத்திரை ஐந்து; மனம், புத்தி, ஆங்காரம் என்னும் அகக்கரணம் சரீரம் எனப்படும். இது மனம் முதலிய மூன்று அகக்கரணங் எனப்படும். கனவு நிலையில் நமக்கு உணர்வும், போக நுகர்ச்சியும் உண்டாதற்குக் காரணமாக உள்ளது இச்சரீரமே ஆகும். ஆயுள் முடிவில் பருவுடலை நீத்தபின் உயிர் பிறிதோர் உடம்பை எடுத்தற்கும், ஒளி உலகு, இருள் உலகிற் செல்லுதற்குப் பற்றுக் கோடாக உள்ளதும் இச்சரீரமே ஆகும். இதுவே உபநிடத வழக்கில் பிராணமய கோசம் எனப்பட்டது. இஃது எட்டுத் தத்துவங்களால் அமைந்தமையின், புரியட்டகம் எனவும் கூறப்படும்.

இனி, இப்புரியட்டகத்தின் காரியமாய், ஐம்பூத பரிணாமம் எனப்படுவதாய், கண்ணுக்குப்புலப்பட்டு, நனவு நிலையில் போக்குவரவுக்கும் போக நுகர்ச்சிக்கும் பயன்படும் பருவுடம்பே தூல சரீரம் எனப்படும். இஃது அன்னமய கோசம் எனப்படும்.

10. ஐந்தவத்ததை. - உயிர் நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படக்கம் என்னும் ஐந்து நிலைகளில் அன்றாடம் ஏறியும் இறங்கியும் வருவதை நாம் உள்நோக்கி (introspection) உணரலாம்.

உயிர் அன்னமய கோசம் எனப்பட்ட பருவுடம்பைப் பற்றித் தொழிற்பட்டு வினைப்பயனை நுகரும் நிலையே நனவு அல்லது சாக்கிரம் எனப்படும். அதைவிட்டுப் பிராணமய கோசம் எனப்பட்ட சூக்கும உடம்பைபற்றி நினைவுணர்வுகளோடு கூடி, சூக்கும வினைப்பயன்களை நுகரும் நிலை கனவு அல்லது சொப்பனம் எனப்படும். அவ்விரண்டையும் விட்டு மோனமய கோசம் என்ற சித்தத்தைப் பற்றி நின்று முன்னைய வியாபாரங்களிலிருந்து நீங்கி ஒடுக்கமுறும் நிலை உறக்கம் அல்லது சுழுத்தி எனப்படும். அம்மூன்றையும் விட்டு விஞ்ஞானமய கோசம் எனப்பட்ட கஞ்சுக சரீரத்தைப்பற்றி அறிவு நிகழ்ச்சி சிறிதும் இன்றி உயிர்ப்பு முதலிய செயல்களை மாத்திரம் உடையதாய் நிற்கும் நிலை பேருறக்கம் அல்லது துரியம் எனப்படும். இனிக் கஞ்சுக சரீரத்தின் தொழிற்பாடும் நிகழாமையின், ஆனந்தமயகோசம் எனப்பட்ட காரிய மாயையின் செயல் ஒன்றே நிகழப்பெற்று உயிர்ப்பும் அடங்கி நிற்கும் நிலை உயிர்ப்படக்கம் அல்லது துரியாதீதம் எனப்படும்.

இவ்வாறு அசுத்தி மாய காரியங்களாகிய ஐங்கோசங்களைப் பற்றி, அவ்வவற்றால் விளங்கும் உணர்வுகளையே தன் இயல்பாகக் கொண்டு விளங்கி, அவத்தை வேறுபாடு அடைவதாய், இவ்வைங் கோசங்களுக்கும் அப்பாற்பட்டதாய் உள்ள தன்னோக்கு உணர்வே (self consciousness) ஆன்மா எனப்பட்டது.

## முத்திசாதனம்

(1) **மேலான குறிக்கோள்**. - இறை, உயிர், தளை என்னும் முப்பொருள்களுள் உயிரே ஏனை இரண்டாலும் பயன் கொள்வது அவ்விரணடனுள் தளை உயிர்களை மயக்கிப் பிறவியிற் செலுத்தும் பகைப் பொருள். இறை அவற்றுக்கு என்றும் உறுதுணையாக நின்று உபகரிக்கும் உறவுப்பொருள் என்னும் உண்மை மேலே விளக்கப்பட்டது. இதிலிருந்து வாழ்க்கையின் முடிந்த, மேலான குறிக்கோள் (பரம லக்ஷியம்) இன்னது என்பது எளிதில் உணரப்படும்.

ஆணவம், கன்மம், மாயை எனப்படும் தளைகளின் நீங்கி முதல்வனைத் தலைப்படுவதே உயிர்களின் முன்னேற்ற நெறியின் முடிந்த மேலான நிலை ஆகும். இந்நிலையே வீடு மோக்ஷம் என்னும் சொற்களால் குறிக்கப்படுவது. வீடுபேறு

என்னும் சொல் அதனியல்பை ஓரளவு செம்மையாகத் தெரிவிக்கும் சொல் ஆகும். வீடு என்பது உயிர் தளையினின்றும் விடுபடுத்லைக் குறிக்கும். வீடு எனினும், விடுதலை எனினும் பொருந்தும். முத்தி, மோஷம் என்னும் சொற்கலும் இப்பொருளையே பயக்கும், பேறு என்பது பெறுதல், அஃதாவது, உயிர் முதல்வனைச் சார்தலினால், முதல்வனுடைய எண்குணங்களும் தன்பால் மேம்பட்டு விளங்கப் பெறுதல் இதுவே வடமொழியில் சிவதத்துவ அபிவியக்தி எனப்படும். சிவதத்துவம்-சிவனது தன்மை, அருட்குணங்கள் எனப்பட்ட எண்குணங்களை உடைமை. அபிவியந்தி - விளக்கம் - அஃதாவது, அக்குணங்கள் உயிரின்கண் விளங்கித் தோன்றுதல்.

''பாசத்தைப் பசுக்கள் விட்டுப் பதியினை அடைய முத்தி'' என்னும் சிவஞான சித்தியும், ''சேர்வார்தாமே தான் ஆகச் செயுமவன்'' என்னும் திருஞானசம்பந்தர் திருவாக்கும் இங்குக் கருதத் தக்கன.

(2) **படிவழி முறை (சோபானக் கிரமம்)**. - ''எவ்வுயுரும் நீங்காதுறையும் இறைசிவன்'' என்பது சைவசமயநெறி என்னும் நூலுட் கூறப்படும் ஓர் உண்மை. அங்ஙனம் உறையும் இறைவன் உயிர்களின் ஆற்றலைத் தடுக்கும் பாச சத்திகளை மெலிவித்துத் தனது பேரின்பமாகிய செம்பொருட்டன்மையைப் பெறுவிப்பதையே திருக்குறிப்பாக உடையவன். ஆதலால், சிவநெறியில் மீளா நாகு (Eternal Damnation) என்றார் போன்ற பேச்சுக்கு இடமே இல்லை. எல்லா உயிர்களும், எஞ்ஞான்றும், எவை எச்சூழ்நிலையில் எந்நெறி மேற்கொண்டு ஒழுகினும், ஆன்ம வளர்ச்சி நெறியில் முன்னேறீயே செல்கின்றன என்பது, சைவத்தின் பரந்த நோக்கமுள்ள பெருங் கொள்கைகளுள் ஒன்று.

ஆயினும், உயிர்கள் தம்மைப்பற்றியுள்ள பாசத தடையின் வன்மை மென்மை பற்றி உணர்வு வகையில் பலபக்குவ வேறுபாடுகளை உடையவைகளாக உள்ளன. இக்காரணம் பற்றி உயிர்கள் எடுக்கும் பிறப்புக்கள் பலவாயின. உயர்ந்த பிறப்பெடுத்த மக்களுள்ளும் அவரவர் மேற்கொள்ளும் சமயங்கலும், ஒழுக்கமும், நூல்களும், உபதேசமுறைகளும் பலவகைப்பட்டன. ஒரு பாடசாலையில் கற்கும் மாணாக்கர் அறிவின் திறம்பற்றி வேறு வேறு வகுப்புக்களில் தங்கிக் கற்று மேல் வருவதனை இதற்கு உவமையாகக் கொள்ளலாம்.

மக்கட் பிறப்பு எய்தினோருள் ஒருகொள்கையோ, குறிக்கோளோ இன்றிக் கண்டதே காட்சி, கொண்டறே கோலம் என வாழ்வோரை நோக்க, இம்மை வாழ்க்கை ஒன்றனையே முடிந்த பயனாகக்கொண்டு அரசியலுக்கும் பொருளியலுக்கும் ஏற்ப வாழ்க்கையை ஒழுங்குபட நடத்துவோர் சிறந்தவர் என்பது தெளிவு. இத்தகையோரையே உலகாயதர் எனப் பெயர் தந்து நம்முன்னோர் முதற்படியில் உள்ளோராகக் கருதினர்.

இனி, இவரை நோக்க, உலக வாழ்க்கையோடு மறுமையைப் பயக்கும் அறநெறியையும் உணர்ந்து வாழ்வோர் சிறந்தவர் என்பதில் ஐயமில்லை. இவ்வற நெறியை வற்புறுத்துவனவாய் எழுந்த மதங்களே புத்தம், சமணம் முதலிய புறச் சமயங்கள் ஆகும். அறவொழுக்கத்தில் தலைநின்று ஒழுகி மேம்மட்டோர்க்கு ஆன்ம உணர்வு அல்லது தன்னை நோக்கி உணரும் உணர்வு விளங்கும். அறவொழுக்கத்தோடு ஆன்ம உணர்வையும் பொருளாகக் கொண்டு உணர்த்தும் சமயங்களே சாங்கியம், யோகம், வேதாந்தம் முதலிய வைதிக சமயங்களாம். ஆதலின், வைதிக நெறி நிற்போர் அற வாழ்க்கை ஒன்றனையே குறிக்கோளாகக் கொண்டோரினும் நுண்ணுணர்வு உடையார் ஆவர்; இனி, சிவநெறி இவரினும் நுண்ணுர்வுடையோரால் பற்றி ஒழுகுவதற்கு உரியதாய், அறவொழுக்கம், ஆன்ம உணர்வு, கடவுள் மெய்யுணர்வு என்னும் மூன்றனையும் பொருளாகக் கொண்டுள்ளது. ''சாதனம் இன்றி ஒன்றைச் சாதிப்பார் உலகில் இல்லை'' என்பது பொது விதி. ஆதலால் சிவநெறியைத் தலைப்பட்டோர் மேலே கூறிய பரம லக் ஷியமாகிய வீடு பேற்றினை எய்துதற்கு மேற்கொண்டு ஒழுகவேண்டிய சாதனங்கள் உள்ளன. அவை சரியை, கிரியை, யோகம், ஞான நூற் பயிற்சி என்பவை. இச் சாதனங்களை மெய்யன்போடு அநுட்டிப் போர்க்கு, உயிர்க்குயிராய் இருந்து உணர்த்திவரும் முதல்வன் ஞானாசிரியனை இடமாகக் கொண்டு வெளிப்பட்டுத் தோன்றி அனுபவ ஞானம் விளங்கச் செய்வன். அவ்வாறு அனுக்கிரகிக்கப் பெற்றோர்க மெய்யுணர்ந்து அவாவறுத்து வீடு பேறடைவர்.

''புறச்சமய நெறிநின்றும் அகச்சமயம் புக்கும்
புகல்மிருதி வழிஉழன்றும் புகலும் ஆச்சிரம
அறத்துறைகள் அவையடைந்தும் அருந்தவங்கள் புரிந்தும்
அருங்கலைகள் பல தெரிந்தும் ஆரணங்கள் படித்தும்
சிறப்புடைய புராணங்கள் உணர்ந்தும் வேத
சிரப்பொருளை மிகத்தெளிந்தும் சென்றால் சைவத்
திறத்தடைவர்; இதிற்சரியை கிரியா யோகம்
செலுத்தியபின் ஞானத்தால் சிவனடியைச் சேர்வர்''

என்னும் சிவஞான சித்தித் திருவிருத்தம் உயிரின் வாழ்க்கைப் பாதையைப் படிமுறையில் வரிசைப்பட வைத்துக் காட்டுகின்றன.

(3) **சைவத்தின் சமரசம்**. - மேற்கூறியபடி எந்தச் சமயத்தையும் இகழ்ந்து தள்ளாது, அவ்வவற்றின் உள்ளீடுகள் எவ்வாறு ஆன்ம வளர்ச்சி நெறியில் மக்கட்குப் பயன்படுகின்றன என்பதை அளவிட்டு வரிசைப்படுத்திப் படிவழியில் வைத்து உணர்த்துவது சைவத்தின் விரிந்த, ஆனால் தன் உயரிய குறிக்கோளை விட்டுக் கொடாத, கொள்கையைக் காட்டும். இதுவே சைவத்தின் சமரசம் எனப்படும்.

இதனால் சைவர்களுக்குப் பிற சமயங்களிடத்துப் பொறையின்மை அல்லது வெறுப்புத் தோன்றுதற்கு இடம் இல்லை. அதே சமயத்தில் தம் ஆசிரியன்மார்கள் உறுதி எனக் கண்டு விதித்த ஒழுக்கங்களை மனம்பற்றி மேற்கொள்ளவும் வாய்ப்பு ஏற்படுகின்றது.

''பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்
அதுநோக்கி வாழ்வார் பலர்''

என்னும் திருக்குறளின் கருத்து இங்குப் புடைபட வைத்துக் கருதுதற்கு உரியது. ஒரு தலைவன் தனக்கு உறுதிச் சுற்றத்தாராய் உள்ள தோழர் முதலாயினோரை ஒரு தன்மையராய்க் கருதி நடந்தால் உயர்ந்தோர் நீங்குவர். அவ்வாறு நோக்கும் பொது நோக்கு நீக்கி, அவரவர் தகுதிக்கு ஏற்ப நோக்கி நடந்தால் எல்லாரும் விடாது உடன் இருப்பர். அதுபோல, ஒருவன் எல்லாக் கொள்கைகளையும் ஒரு தன்மையனவாகக் கருதின், அவன் எதனையும் மதித்தவன் அல்லன், அவன் அறிவு உயர்ந்த கொள்கையைப் பற்றுமாறும் இல்லை. அவ்வவற்றின் தகுதிக்கு ஏற்ப வரிசைப் படக்கொண்டு நோக்கின், அவன் எல்லாவற்றாலும் பயன் கொள்வன், எதனையும் இகழ்ந்தவன் ஆகான். உயர்ந்ததையும் கைக் கொள்வான்.

(4) **வீடு பேற்றிற்கு உரிய சிறந்த சாதனம்**. - வீடு என்னும் சொற்குப் பொருள் விடுதலை, அஃதாவது, பாசப்பற்றை விடுதல் - என்பது மேலே கூறப்பட்டது. பற்று உள்ள வரையில் ஒருவருக்குப் பிறவியும், பிறவியால் வரும் துன்பங்களும் நீங்காத. அப்பற்றும் முதல்வனைப்பற்றினால் அன்றி நீங்காது. மரத்தின் மீது ஏறி முன்னவன் தான் பற்றியுள்ள ஒரு கிளையை விடவேண்டின், வேறொரு களையைப்பற்ற வேண்டும். அதுபோல, சிவப்பற்றைப் பற்றினார்க்கு அன்றி அவப்பற்றாகிய பாசப்பற்று அறாது. இக்காரணம் பற்றியே, தெய்வப் புலமைத் திருவள்ளுவனார்,

''பற்றுக பற்றற்றான் பற்றினை; அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு''

என்பார் ஆயினர்.

## வழிபாடு

பாசப்பற்று விடுதற்பொருட்டு முதல்வனைப்பற்றும் முறையே கடவுள் வழிபாடு எனப்படும். அது பொதுவும், சிறப்பும் என இருவகைப்படும். வழிபாடு - பின் நிற்றல், இறைவன் திருக்குறிப்பின் வழி நின்று ஒழுகுதல். வழிபாடு, பிற்றை நிலை என்பவை ஒரு பொருட் சொற்கள்.

# சைவம்

பொது வழிபாடாவது இறைவனது அருளாணை ஆகிய அறத்தின் வழி நிற்றல். இது பொது ஒழுக்கம் எனவும்படும். இஃது இல்லறம்; துறவறம் என இருகைப்பட்டு, முறையே அன்பையும், அருளையும் அடிப்படையாகக்கொண்டு நிகழத்தக்கது. யோக நூல்களில் விதிக்கப்படும் இயமம். நியமம் என்பவை இப்பொதுவொழுக்கத்தில் அடங்கும்.

கொல்லாமை, வாய்மை, கள்ளாமை, தன் மனைவியல்லாத மாதரைக் காமுறாமை, இரக்கம், வஞ்சனையின்மை; பொறையுடைமை; மனங் கலங்காமைல் அளவறிந்து உண்டல், தூய்மை என்னும் பத்தும் இயமம் எனப்படும் ஒழுக்கம் ஆகும்.

தவம், மனம் உவந்திருத்தல், கடவுட்கொள்கை, பொருளை நல்ல வழியில் ஈட்டி நல்ல வழிகளில் செலவிடுதல், தன்னியன் உயர்ந்தோரை வழிபடல், உயிர்கு உறுதி பயக்கும் நூல்களைக் கேட்டல், பிறப்பு, செல்வம், அதிகாரம் என்பவற்றால் செருக்குறாமல் அடங்கி ஒழுகுதல், தக்கன தகாதன பகுத்து உணர்தல் இறைவன் திருப் பெயரை எண்ணுதல், விரதம் என்னும் பத்தும் நியமம் எனப்படும் ஒழுக்கம் ஆகும்.

''பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்''

என்னும் அருமைத் திருக்குறளில் பொய்தீர் ஒழுக்க நெறி என்றது இப்பொதுவொழுக்கத்தையே ஆகும். இவ்வொழுக்க நெறியால் மனம் மாசு அகன்று தூய்மையுற்று, நிலையாத பொருள்களைப் பற்றுதலினின்று நீங்கும். ஆதலால், இது பொய்தீர் ஒழுக்கநெறி எனப்பட்டது.

சிறப்பு வழிபாடாவது முதல்வனது உண்மையியல்பைத் தெளியக் கண்டு அவனைச் சார்தலால், அவன்றன் அருட்குணங்கள் நம்மிடத்து மேம்பட்டு விளங்குமாறு ஒழுகும் ஒழுக்கம். இஃது அருள் நூல்களை ஓதி உணர்ந்து, அவற்றுள் கூறியபடி முதல்வனை வணங்குதல், வாழ்த்துதல், நினைத்தல், உள்நோக்கி உணர்தல் என்னும் வடிவில் நிகழத்தக்கது. இவ்வொழெக்கம் அவரவர் ஆன்ம வளர்ச்சி நிலைக்கு ஏற்றபடி பலதிறப்படுவது. அப்பல திறனையும் பெரியபுராணத்துட் கூறப்படும் உண்மை நாயன்மார் வரலாறுகள் பற்றி உணரலாம். ஆயினும், உலகியலுக்கு இன்றியமையாது வேண்டப்படும் ஒழுங்கு முறைபற்றி, இது சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்கு வகையுள் வைத்துணர்த்தப்படும். இச்சிறப்ப பொழுக்கத்தை முறைப்பட உணர்ந்து, முறைப்படக் கொண்டு உய்த்தற் பொருட்டு

இயற்றப்படும் தொடக்கச் சடங்கு சிவதீக்கை எனப்படும். தொன்றுதொட்டு வரும் கேள்வியோடு அனுபவமும் உடைய நல்லாசிரியனே சிவதீக்கை செய்தற்கு உரியன்.

(1) **சரியை**. - முதல்வன், தன்னியல்பில், "உருவொடு தொழில் பெயர் ஒன்னும் இன்றியே" உண்மையறிவின்பப் பிழம்பாய், யாங்கணும் நிறைந்திருப்பவன். ஆயினும் கல்வி கற்கும் மாணாக்கரிடத்துக் காணுமாறுபோல, உயிர்களின் அறிவு படிமுறையால் வளர்ந்து பெருகி மேலோங்கி, முடிவில் வியாபகமாய் நின்று முதல்வனைப்பற்றும் இயல்புடையது. ஆதலால், அதற்கு ஏற்றபடி, முதல்வன் அருவம், அருவுருவம், உருவம் என மூன்று வகைப்படும் அருள் வடிவங்களைக் கொண்டருள்கின்றான். அம்மூன்றுனுள் முதற்கண் உருவடிவம் ஒன்றனையே பொருள் என்று உணர்ந்து புறத் தொழில் அளவில் இயற்றப்படும் வழிபாடு சரியை எனப்படும்.

சத்தியாவந்தனம், திருவைந்தெழுத்து எண்ணுதல், திருக் கோயிலுக்கும் முதல்வன் அடியார்களுக்கும் தொண்டுபுரிதல் முதலியவை இதன்கண் அடங்கும்.

இறைவன் 'உலகெலாமாகி உடலுமாய்' நிற்கும் நிலையை இச்சரியையாளர் உணரார். ஆதலால் இவர் சிவலிங்கம் முதலிய திருமேனிகளையே முதல்வன் என உளங்கொண்டு வழிபடுவர். இவர்களுக்கு முதல்வனும் அத்திருவுருவங்களில் இருந்து வெளிப்படுதல் இன்றி அருள்புரிவர். இன்னோர் இதன் பயனாகப் பெறும் பதம் **சாலோகம்** எனப்படும்.

சாலோகம் ஆவது இறையுலகு எய்தி, அங்கு யாண்டும் தடையின்றி இயங்கி அங்குள்ள போகங்களை நுகர்த்து வாழ்தல். சரியையயாளர், ஒருவர் வீட்டில் பணிசெய்யும் அகத்தொண்டர்க்கு உள்ள அன்பும் உரிமையும் போன்று அன்பும் உரிமையும் இறைவனிடத்து உடையவராய் ஒழுகுதல் பற்றி இவர்தம் நெறி **தொண்டு நெறி** (**தாசமார்க்கம்**) எனப்படும்.

உண்மைச் சிவானுபூதிச் செல்வர்களாகிய பெருமக்கள் நால்வருள் திருநாவுக்கரசர் அருள் வாழ்க்கையில் இத்தொண்டு நெறி முனைந்து தோன்றி விளக்கம் பெறுகின்றது.

(2) **கிரியை**. - மேற்கூறிய தொண்டு நெறியில் பயின்று வந்தார்க்குப் பக்குவ முதிர்ச்சிப்பற்றி நுண்ணுணர்வு மிகுந்து அன்பு முதிரும். இவ்வாறு உணர்வும் அன்பும் முதிரப் பெற்றோர் முதல்வனுடைய ஐந்தொழிலியற்றும் ஆற்றலைக் குறிக்கும் ஐம்பெருமணுக்களும், அருட்குணங்களைக் குறிக்கும் ஆறங்கனமனுக்களும், மூல மனுவுமே பொரு; சிவலிங்கத் திருமேனி அம் மந்திரத் திருமேனியைக் குறித்து வழிபடுவதற்கு இடமாக உள்ளது என உணர்ந்து, புறம்,

அகம் என்னும் இரண்டன் தொழிலாலும் வழிபடுவர். இவ்வழிபாடு கிரியை எனப்படும். இதுவே சிவபூசை, சிவதன்மம் என்னும் பெயர்களால் வழங்கப்படுவது.

சிவபூசைக்கு முன் அங்கமாகப் பூதசுத்தி, தானசுத்தி, திரவிய சுத்தி, மந்திரசுத்தி, இலிங்கசுத்தி என்னும் ஐவகைச் சுத்திகள் செய்யத்தக்கன.

இவ்வழிபாட்டில் மந்திரம், கிரியை, பாவனை என்பவை முறையே வாய், கை, சிந்தை என்பவற்றால், ஒரு வழிப்படக் கருத்தோன்றிச் செய்யப்படும். இப்பூசை முன்னர் அகத்தே இதயத்தானத்தில் பாவனை வகையால் செய்யப்பட்டு, பின் புறத்தே சிவலிங்கத் திருமேனியில் செய்யப்படும். பூசைக்கு அங்கமாகச் செய்யப்படுவன தியானமும் ஓமமும் ஆகும். பூசை அவற்றின் அங்கி ஆகும். அங்கி - முதன்மையுள்ள செயல்.

கிரியையாளர்கள் முதல்வன் மந்திரங்களால் திருமேனி கொள்ளுகிறான் எனக்கருதி வழிபடுதலினால், அவர்களுக்கு முதல்வன், கடைந்தபொழுது விறகின்கண் தோன்றும் நெருப்புப் போல, அவ்வப்பொழுது தோன்றி நின்று அருள் புரிவன். பூசை என்னும் சொல் பூஜா என்பதன் தற்பவம். பூ-பூர்யந்தே (நிறைகின்றன). ஜா-ஜாயதே (தோன்றுகிறது) என்பது சொல்லின் இயல்பு; அஃதாவது, துன்பத்திற்குக் காரணமாகிய கன்மம் எல்லாம் பூர்த்தியடைந்து இன்பத்திற்கும் காரணமான ஞானம் தோன்றுகிறது; இந்நிலையை எய்துவிப்பது பூசை என்றபடி.

கிரியையில் வழுவாது நின்றதோர் முடிவில் எய்தும் பயன் சாமீபம் எனப்படும். அஃதாவது, மைந்தர் போன்று இறைவனுக்கு அனுக்கராய் வைகி இன்புறும் நிலை. கிரியையாளர்களின் அன்பும் உரிமையும் மைந்தர்க்கு உள்ளவை. போன்றிருத்தலால், இவர் தம் நெறி மகன்மை நெறி (சற்பத்திர மார்க்கம்) எனப்படும். திருஞானசம்பந்தருடைய அருள் வாழ்க்கையில் மகன்மை நெறி முனைந்து தோன்றி விளக்கம் பெறுகின்றது.

(3) **யோகம்**. - கிரியையில் நின்றோர்க்கு நிகழும் பக்குவ முதிச்சியால் அதிநுட்ப உணர்வும் அதற்குத் தகுந்த அன்பும் வளரும். அவ்வாறு வளரப்பெற்றோர், சுத்த மாயையில் விளங்குவனவாய், மனம் முதலிய அகக்கருவிகளைச் செலுத்துவனவாய் உள்ள நாத, விந்துக்களாகிய சோதி வடிவே பொருள்; முற்கூரிய உருவம், அருவுருவம் எனப்பட்ட வடிவங்கள் அதனை நினைந்து வழிபடுதற்கு இடமாக உள்ளவையே என உணர்ந்து அகத்தொழில் ஒன்றனே அந்த அருவத் திருமேனியை வழிபடுதற்கு உரியர் ஆவர். இவ்வழிபாடு யோகம் எனப்படும்.

ஐம்பொறிகளை அடக்கி, உயிர்ப்பைச் சுழுமுனாநெறியே செலுத்துதல்; அதனால் மூலாதாரத்தில் விளங்கும் அசபாசத்தியை ஏனைய ஆதாரங்களினும் கண்டு மேலே செல்லுதல்; பின் பிரமாந்திரம் என்னும் உச்சியில் ஆயிரம் இதழ்த்

தாமரையை அலரச் செய்து, அதன்கண் விளங்கும் சந்திரமண்டலத்தை மூலக்கனலால் இளகச் செய்தல்; அதனால் ஒழுகும் அமுததாரையால் நாடிகள் எல்லாம் நனைதலால் உடம்பு நிலைத்திருக்கச் செய்தல்; தான் உடற்பற்று நீங்கிப் பேரொளியாகிய சிவசோதியைக் கண்டு அது தான்ஆகப்பாவித்தல் என்னும் இவ்வியல்பினை உடையது யோகம்.

இயமம், நியமம், இருக்கை (ஆசனம்), வளிநிலை (பிராணாயாமம்), தொகைநிலை (பிரத்தியாகாரம்) பொறைநிலை (தாரணை), நினைதல் (தியானம்), அதுவாதல் (சமாதி) என்னும் எட்டும் இதன் அங்கங்கள் ஆம். யோகியர் எய்தும் சித்திகள் (பேறுகள்) அணிமா, மகிமா, இலகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம், கரிமா என எண்வகைப்படும்.

யோகியர் எய்தும் பதம் சாரூபம் ஆகும். அஃதாவது, தோழற்கு உள்ள உரிமைபோல் இறைவனோடு ஒத்த வடிவம், ஒத்த அணிகலம் பெற்று இன்புறுவது, இவர் தம் நெறி தோழமை நெறி எனப்படும். இந்நெறி நம்பி ஆரூரர் அருள்வாழ்க்கையில் முற்பட்டுத் தோன்றி விளக்கம் பெறுவது ஆம்.

இதுகாறும் விளக்கிய மூவகைப்படும் வழிபாடுகளும் இறப்பில் தவம் எனவும், இவற்றின் பயனாகக் கூறப்பட்ட சாலோகம் முதலிய மூன்றும் பதமுத்திகள் எனவும் வழங்கும். பதமுத்திகள் சரியை முதலியவற்றுக்கு இடையில் வரும் பயன்கள் ஆம். ஞானமே அவற்றின் முடிந்த உண்மைப்பயன்.

(4) **ஞானம்**. - மேற்கூறியபடி சரியை கிரியா யோகங்களில் பயின்றார்க்கு முதற்பொருளை உள்ளவாறு உணரும் வியாபக உணர்வு விளங்கும். அவ்வுணர்வால், எல்லையின்றி யாங்கணும் நிறைந்து உண்மையறிவின்பப் பிழம்பாகிய முதல்வனது உண்மை இயல்லைக் கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை என்னும் படிவழி சென்று தலைப்பட்டுணர்ந்து, அவன் அருள்வழி நிற்றலே ஞானம் எனப்படும்.

இதற்குப் பயன் பரமலக்ஷியம் என மேற்கூறிய வீடுபேறு ஆகும். இது பரமுத்தி எனவும், சிவ சாயுச்சியம் எனவும் கூறப்படும். சிவஞானிகள் நிற்கும் நெறி நன்நெறி (சன்மார்க்கம்) எனப்படும். இது சமயகுரவர் நால்வர் வாழ்க்கையினும் உணரப்படுவதே யாயினும், மாணிக்கவாசகர் வாழ்க்கையை இந்நெறிக்குச் சிறப்பாக எடுத்துக் காட்டுவது வழக்கமாக உள்ளது.

(5) **யோகிகளும் ஞானிகளும் உருவ வழிபாட்டில் கொள்ளும் கருத்து வகை**. - யோகியர் சிவலிங்கம் முதலிய திருமேனிகளை வழிபடும்போது, நமது இதயத்தில் விளங்கும் முதல்வன் அத்திரு மேனிகளிலும் இருந்து வழிபாட்டை ஏற்றுக் கொள்வன் எனக் கருதிப் பிரணவம் முதலிய மந்திரங்களால் வழிபடுவர்.

அவர்களுக்கு முதல்வன் கறந்தபோது வெளிப்படும் பால்போல், அவ்வம் மந்திரங்களால் அவரவர் விரும்பிய வடிவாய் அவ்வப் பொழுது வெளிப்பட்டு அருள் புரிவன்.

சிவ ஞானிகள், முதல்வனை, ஓரிடமாகக் குறித்தல் இன்றி அன்பு மாத்திரத்தால், அன்பு விளையும் இடங்களில் எல்லாம் வழிபடுவர், முதல்வன் அவர்களுக்குக் கன்றை நினைந்து தலையீற்று ஆனுக்குப் பால் அந்நினைவு மாத்திரத்தால் சுரத்தல்போல, எப்போதும் அவர் தம் அன்பே தானாக வெளிப்பட்டு நின்று அருள்புரிவன்.

இதனால், எல்லாராலும், தொழப்படும் முதல்வன் ஒருவனே ஆயினும், தொழுவார் கருத்து வேறுபாடுபற்றி, வழிபாட்டின் பயனும், அப்பயனை முதல்வன் அருளும் முறையும் வேறுபடும் என்பது உணரப்படும்.

(6) **சரியை முதல் நான்கும் ஞானம் எனப்படல்**. - மேலே கொடுத்த விளக்கத்திலிருந்து இறைவனை அவரவர் உணர்வு நிலைக்கு ஏற்ப அறிந்து அணுகுதலே சரியை முதலாக நான்கு வகையில் வைத்து உணர்த்தப்படுகின்றது என்பது உணரப்படும். உருவம், அருவுருவம், அருவம், இவற்றைக் கடந்த உண்மையறிவின்பப் பிழம்பு என்னும் முதல்வனுடைய நால்வகை இயல்புகளை முறையே அறிந்து செய்யும் வழிபாடே சரியை முதல் நான்காகக் கூறப்பட்டது. இவ் வழிபாட்டு முறையில் வழிபடுவோர் அறிவுபடி முறையில் மேன் மேலும் நுணுகிவரும் என்பதும், அதற்குத்தக அறிவைத் தடுத்து நின்ற மலசத்தியும், முறைமுறையே தேய்ந்து வரும் என்பதும், ‘‘அன்பும் அருளும் அறிவுக்கு அடையாளம்’’ ஆகலின் முதல்வன் மாட்டு நிகழும் உண்மையன்பும் அம்முறையே முதிர்ந்துவரும் என்பதும் உணரத்தக்கன. முதிர்ந்து முறுகி வளர்ந்த மெய்யன்பு ஒன்றே முதற்பொருளை உணர்விப்பதும், உணர்ந்து பேரின்ப மயமாய் அனுபவிக்க வைப்பதும் ஆகும். இவ்வன்பு மெய்யுணர்வின் பயனாக முதல்வன் அருளால் கிடைப்பது.

‘‘ஞானம் ஈசன்பால் அன்பே என்றனர் ஞானம் உண்டார்’’ என்னும் பெரியபுராணம் இங்குச் சிந்திக்கத் தக்கது. இதனால் மெய்யுணர்வில் பயனே ஈசன்பால் உளதாகும் அன்பு என்பது உணரப்படும்.

‘‘அன்பினில் விளைந்த ஆரமுதே’’, ‘ஈறிலாப் பதங்கள் யாவையும் கடந்த இன்பமே, என்னுடை அன்பே’, ‘அன்பே சிவமாவதாரும் அறிகிலர்’, ‘‘அன்பில் ஊன்ற உள்ளெழும் சோதியாய் நின்றனன்’’ எனத் திருமுறைகளில் குறிக்கப்படும் அன்பு மெய்யுணர்வின் பயனாக முதல்வன் திருவருளால் பெறும் அன்பே ஆகும் என்னும் உண்மை உணர்ந்து கடைப்பிடிக்கத் தக்கது.

இன்னும் இங்குக் கூறியதிலிருந்து முதல்வனை உணரும் உணர்வே மெய்யுணர்வு எனப்படும். ஆகலின், முதல்வன் இயல்பை உணரும் உணர்வால் அவன்பால் மெய்யன்பும், அம்மெய்யன்பால் சரியை முதலிய வழிபாடும் நிகழ்வன என்பதும் உணரப்படும். இக்காரணம் பற்றிச் சரியை முதலிய நான்குமே மெய்ஞ்ஞானம் எனவும்படும். “விரும்புஞ் சரியைமுதல் மெய்ஞ்ஞானம் நான்கும் அரும்புமலர் காய்கனிபோல் அன்றோ பராபரமே” என்னும் தாயுமானார் வாய்மொழி கருதத்தக்கது.

(7) **மெய்யுணரும் அறிவிற்றேன்றும் குறிகள்**. - பயன் கருதாது செய்துவரும் சிவபுண்ணியங்களின் பயனாக ஒருவர் அறிவின்கண் இருவினையொப்பு என்னும் குறி (அடையாளம்) தோன்றும். அஃதாவது, நல்வினை, தீவினை என்னும் இருவினைகளையும்; அவற்றின் பயனாகிய இன்பத் துன்பங்களையும், - இரண்டும் பிறப்புக்கே ஏது ஆவன எனக் கண்டு சமபுத்தி செய்து - ஒப்ப உவர்த்தல். “இருள் சேர் இருவினையும் சேரா இறைவன் - பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு என்னுந் திருக்குறள் இக்கருத்துப் பற்றி எழுந்தது.

இருவினை யொப்பின்கண் நிகழ்வன மலபரிபாகமும், சத்திநிபாதமும், சத்திநிபாதத்தால் நிகழ்வது மெய்யுணர்வின் விளக்கமும் ஆகும். மலபரிபாகமாவது மலசத்திகள் தேய்ந்து அகலுதற்குரிய பருவம் எய்துதல். இப்பரிபாகம் நிகழும்போது அதன்வழி நின்று உயிரை நடாத்தி வந்த முதல்வன் அருளாகிய திருவருள் தன் கருனைமறம் மாறிக் கருணையேயாகி உயிரின்கண் பதியும். இப்பதிவு சத்திநிபாதம் எனப்படும். சத்திநிபாதத்தில் நிகழ்வது மெய்யுணர்வு. மெய்யுணர்வின் முடிவு நிலையாகிய சிவஞானத்தால் அவா அறுத்து மெய்யன்பால் முதற்பொருளை அணைத்து, பிரிப்பின்றி ஒன்றி நின்று இன்புறுதலே பரமுத்தி எனப்படும் வீடுபேறாம்.

ஆதியார் தாளினை அருளொடே வழிபடும்
நீதியாம் நீரினார் நிலைமையாய் நின்றிடும்
பாதம் நான்கு; அவர்பெறும் பதமும் நான்கு அவற்றுள்ளே
ஓதியார் பெறுவதோர் உயர்பெருங் கதியே.

- கந்தபுராணம்.

நல்லசிவ தன்பத்தால் நல்லசிவ யோகத்தால்
நல்லசிவ ஞானத்தால் நான் அழிய - வல்லதனால்
ஆரேனும் அன்புசெயின் அங்கே தலைப்படுங்காண்
ஆரேனும் காணா அரன்.

- திருக்களிற்றுப்படியார்

# சைவம்

## சிவ தீக்கை

வேதம் ஓதுதற்கும் வைதிக ஒழுக்கம் மேற்கொண்டு நடத்துதற்கும் தகுதியை உண்டுபண்ணுவது பூணூல் அணிவிப்பதாகிய உபநயனச் சடங்கு. அவ்வாறே, சைவத் திருமுறைகளை ஓதுதற்கும் சைவ ஒழுக்கம் மேற்கொண்டு ஒழுகுதற்கும் தகுதியை உண்டு பண்ணுவது சிவதீக்கையாகும்.

தீக்கையானது உயிர்க்குப் பாசத்தைக் கெடுத்து மெய்யுணர்வை ஏற்றுக்கொள்ளும் செவ்வியைப் பயக்கும், முதல்வனது சத்தியின் தொழிற்பாடு எனக் கொள்ளப்படுகின்றது. தீக்ஷா என்னும் சொல்லில் தீ என்பது கொடுத்தல் எனவும், க்ஷா என்பது கெடுத்தல் எனவும் பொருள்படும். இது முதல்வன் செய்யும் ஐந்தொழில்களுள் அருளல் என்பதன்பாற்படும்.

முதல்வனால் தரப்படும் தீக்கையாகிய இவ்வருட்செயல் நிராதாரம், சாதாரம் என இருவகைப்படும். மூவகைப்படும் உயிர்களுள் மூலமலம் ஒன்றே உடைய விஞ்ஞான கலர்க்கு முதல்வன் அவர்தம் உயிர்க்குயிராய் நின்றவாறே மலசத்தியைக் கெடுத்துத் தன்னையுணரும் மெய்யுணர்வைத் தோற்றுவிப்பன். மலம் கன்மம் என்னும் இரண்டாலும் கட்டுற்று நிற்கும் பிரளயாகலர்க்கு முதல்வன் நாற்றோளும் கறைக்கண்டமும், சடைமுடியும் முதலிய திருவடையாளம் உள்ள தனது அருட்டிறாமேனி காட்டி, திருநோக்கு, பரிசம், உரை என்னும் மூன்றாகும் மலங்கெடுத்து மெய்யுணர்வு அளிப்பன். இங்ஙனம் இவர்களுக்கு முறையே தன்மையிலும் முன்னிலையிலும் நின்று, வேறு ஓர் ஆதாரத்தைக் கொள்ளது, முதல்வன் தானே செய்யும் அருட்செயல் நிராதார தீக்கை எனப்படும். தேவார ஆசிரியர்கள் மூவருக்கும் முதல்வன் அருளிய முறை நிராதார தீக்கையேயாகும்.

இனி, மலம், கன்மம், மாயை என்னும் மூன்றாலும் கட்டுப்பட்ட சகலர்க்கு, முதல்வன், தன்னால் நிலவுலகில் நிறுவப்பட்ட திருக்கயிலாய பரம்பரையில் இடையறவு படாதுவரும் உபதேசத்தோடு உண்மையனுபவமும் உள்ள ஞான ஆசாரியனை இடமாகக்கொண்டு செய்வதே சாதார தீக்கை எனப்படும். ஆதாரம் - இடம். திருவாதவூர் அடிகளுக்கு முதல்வந்தானே வந்து அருள்செய்தது உண்மையே யாயினும், சாதாரா தீக்கையின் இயல்பை மக்கள் உணர்ந்து கடைப்பிடித்தற் பொருட்டு, அதற்கு உரிய முறையால் அருள் செய்யப்பட்டது என்பது மரபு.

சாதார தீக்கை எழுவகைப்படும். அவை திருநோக்கு; பரிசம்; உரை, பாவனை, சாத்திரம், யோகம், ஔத்திரி என்பவை ஆகும்.

1. இவற்றுள் திருநோக்கு என்பது, மீன் தன் சினையை நோக்கி அதிலிருந்து தன் குஞ்சை வெளிவரச் செய்யுமாறுபோல, ஆசிரியன் தன் அருள் நோக்கத்தால் மாணாக்கனைப் பாசபந்தத்திலிருந்து விடுவித்தல்.

2. பரிசமாவது கோழி தன் முட்டையைச் சிறகால் பரிசித்துக் குஞ்சை வெளிவரச்செய்தல் போல, ஆசிரியன் சிவசொரூபமாகப் பாவிக்கப் பெற்ற தன் திருக்கையை மாணாக்கண் முடியில் வைத்து, அவனைப் பாசப்பிணியிலிருந்து விடுவித்தல். திருவடியை முடியில் வைத்தலும் இதன்கண் அடங்கும்.

3. உரையாவது திருவைந்தெழுத்து முதலிய மந்திரங்களைப் பொருளுடன் உபதேசித்தல். இது வாசக தீக்கை எனவும் படும்.

4. பாவனையாவது, ஆமை தன் முட்டையை மனத்தால் நினைத்து உதவுதல் போல, ஆசிரியன் மாணாக்கனைச் சிவமாக நினைத்தருளல் பாவனை - நினைவு.

5. சாத்திர தீக்கையாவது சித்தாந்த சாத்திரங்கள் வாயிலாக முப்பொருள் இயல்பை உளங்கொளச் செய்து அவ்வாற்றால் அக்விருள் தீர்த்தல்.

6. யோகமாவது மாணாக்கனது ஆன்மாவை யோக நெறியால் தன் உயிர்ப்போடு சேர்த்துக்கொண்டுபோய், தன் முடியின்மேல் மீதானத்தில் விளங்கும் பரஞ்சோதியுடன் ஒன்றுவித்து, தூய்தாக்கி, மீளவும் மாணாக்கன் இதயத்தில் நிறுவுதல்.

இவை ஆறும் தனித்தனி மாணாக்கர்கள் பக்குவங்களுக்குத் தக்கபடி செய்யப்படும்போது சுதந்திரம் எனப்படும். அவ்வாறன்றிப் பின் கூறப்படும் ஔத்திரி தீக்கைக்கு அங்கமாகவும் இவற்றுள் ஒன்றும் பலவும் செய்யப்படும்.

7. ஔத்திரி எனப்படுவது குண்டமண்டலங்களோடு கூடிய ஓமத்தோடு செய்யப்படுவது, ஹுதம்-ஓமம், ஹுதத்தோடு கூடியது ஹௌத்தரி அல்லது ஔத்திரி.

இறுதியில் கூறப்பட்ட ஔத்திரி சமயம், விசேடம், நிருவாணம் என மூவகைப்படும்.

(அ) சமய தீக்கையாவது வேள்விச்சாலை அமைத்து, தீயுருவாய் விளங்கும் முதல்வனை மாணக்கன் வழிபடும்படி செய்து, அவனை ஓமத்தால் தூய்மைப்படுத்துவது. இதனால், அவன் திருவைத்தெழுத்து எண்ணுதல் முதலிய சரியை நெறி நிற்றற்குத் தகுதியுடையோன் அவன். “முன்னம் அவனுடைய நாமம்

கேட்டாள்'' என்னும் திருவாக்கின்படி இறைவன் திருப்பெயரைக் கேட்டுச் சிந்திக்கும் வாய்ப்பு அளித்தலின், இத்தீக்கை மந்திராதி காரை எனப்படும்.

(ஆ) விசேட தீக்கையாவது சமய தீக்கை பெற்ற மாணாக்கனைச் சிவபுத்திரன் ஆகச் செய்வது. இதனால், ''மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள் பின்னை'' எனவும்; ''அவனுடைய ஆரூர் கேட்டாள் பெயர்த்தும்'' எனவும் எழுந்த திருவாக்கின்படி. இறைவன் ஐம்பெருமனுக்களால் உருக்கொண்ட நிலையைக் கருதி ஒழுகும் கிரியைக்கும் அவன் நெஞ்சக் கமலத்தை இடமாகக் கொண்டருளும் நிலையைக் கருத்யொழுகும் யோகத்திற்கும் மாணாக்கன் தகுதியுடையவன் ஆகின்றான். திருமுறைகள் முதலிய தாக்கி, மீளவும் மாணாக்கன் பரஞ்சோதியுடன் ஒன்றுவித்து, தூய் அருணூல்களை ஓதுதல், அவற்றின் நுண்பொருள்களைச் சிந்தித்துல் முதலியவை ஞானபூசை எனப்படுதலின், அவற்றுக்குரிய தகுதியும் விசேட தீக்கையால் வருவது எனவே கொள்ளப்படும். இக்காரணம்பற்றி இத்தீக்கை அர்ச்சனாதிகாரை, யோகாதிகாரை என்னும் பெயர்களால் வழங்கப்படும்.

(இ) நிருவாண தீக்கையாவது சரியை கிரியா யோகங்களில் வழுவாது நின்ற மாணாக்கனுக்கு அவன்றன் சஞ்சிதகன்மத்தை வறுத்த விதைபோல வலியிழக்கச் செய்து, மூல மலத்தின் வலியையும் நீக்கி, முப்பொருள் பற்றிய மெய்யுணர்வைப் பொது வகையால் விளங்கச் செய்வது, இது சைவ சாத்திரங்களின் உண்மைப் பொருளின் ஆராய்ச்சிக்குத் தகுதியைத் தருவது. இத்தீக்கை பெற்றோர்க மேற்கொள்ளும் நெறி ஞான நெறி ஆகும். இவர்தாமும் சிவபூசையினையும் யோகப் பயிற்சியினையும் கடைப்பிடித்து ஒழுகற்பாலர்.

மேற்கூறிய சமயம், விசேடம், நிருவாணம் என்னும் ஔத்திரியின்வகை மூன்றும் தனித்தனி, நிர்ப்பீசம், சபீசம் என இரு வகைப்படும். உபதேசிக்கும் மந்திரங்களை பீச அக்கரங்களின்றி உணர்த்துவது நிர்ப்பீசம். இது சமய ஆசாரங்களை முற்றிலும் ஒம்பி ஒழுக முடியாதவர்களுக்குச் செய்யப்படுவது. மந்திரங்களைப் பீசங்களுடன் உணர்த்துவது சபீசம் எனப்படும்.

சமய வழிபாடு நித்தியம், நைமித்திகம், காமியம் என மூன்றாகப் பகுக்கப்படும். நித்தியம் என்பது அன்றாடம் மாறாமல் செய்து வரும் அநுட்டானம், பூசை முதலியவை ஆகும். நைமித்திகம் எனப்படுவது நித்தியத்தில் ஏற்படும் குறைவு தீர்தற் பொருட்டு விசேட காலங்களில் சிறப்பாகச் செய்யும் வழிபாடு. காமியம் என்பது சிற்சில பயன்களைக் கருதி நூல்களில் விதித்தபடி அவ்வப்போது செய்யும் வழிபாடு. இவற்றுள் நிர்ப்பீசதீக்கை உடையார் நித்தியம் ஒன்றற்கே உரியவர், ஏனைச் சபீசதீக்கை உடையார் நித்தியம், நைமித்திகம், காமியம் என்னும் மூன்றனையும் செய்தற்கும் செய்வித்தற்கும் உரியவர். இக்காரணம் பற்றி நிர்ப்பீசதீக்கை நிரதிகாரை எனவும் சபீசதீக்கை சாதிகாரை எனவும் கூறப்படும். ச-

அதிகாரை - அதிகாரத்தை உடன் கொண்டது. நிர் அதிகாரை - அதிகாரத்தைக் கொள்ளாதது.

சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு

என்னும் திருக்குறளில் பூசனை என்றது நித்தியத்தையும், சிறப்பு என்றது நைமித்திகத்தையும் குறித்தல் நினைக்கத்தக்கது. காமியத்தைத் திருவள்ளுவர் நைமித்திகத்தில் அடங்கக் கொண்டமை உணரத்தக்கது.

## சைவ ஆசாரியர்

மேற்கூறிய மூன்று தீக்கைகளையும் சபீசமாகப் பெற்றுச் சைவ நூல் உணர்வும் சைவ் ஒழுக்கமும் குன்றாதவராய், ஆசாரிய அபிடேகமும் பெற்றேரே சைவ ஆசிரியர் ஆவர். இவை யெல்லாம் உடைய சிவவேதியர் திருக்கோயில்களில் பரார்த்த வழிபாடு செய்தற்கு உரியர் என்பது சைவ ஆகமங்களின் நுணிபு.

சைவர்க்கு உரிய இன்றியமையாத சிறப்பொழுக்கம்,

"எவ்வுயுரும் நீங்காத து உறையும் இறைசிவனென்று
எவ்வுயிர்க்கும் அன்பாய் இருத்தலும்",

சிவ சின்னங்கள் அணிந்து கொள்ளுதலும்; திருவைந் தெழுத்தும் எண்ணுதலும், திருமுறை ஓதுதல், மெய்கண்ட நூற்பொருள் கேட்டல், சிவபூசை சிவத்தியானம் முதலியவையுமாம். குருலிங்க சங்கம வழிபாடும் சைவராவார் அனைவரும் மேற்கொண்டு ஒழுக வேண்டிய ஒழுக்க நெறி ஆகும்.

(1) **எவ்வுயிர்க்கும் அன்பாயிருத்தல்**. - இஃது எல்லோருக்கும் உரிய பொது ஒழுக்கமே ஆயினும், சைவர்க்குத் தனிச்சிறப்பைத் தருவதக உள்ளது. கொல்லாமை. புலால் உண்ணாமை, கள்ளுண்ணாமை என்பவை இவ்வொழுக்கத்திற்கு அடையாளமாக உடனிகழ்வன ஆகும். புலால் கலவாத உணவைச் சைவ உணவு என்றலும், புலால் உண்ணாத அனைவரையும் சைவர் எனப்பொதுப் பட வழங்கும் இதனை வலியுறுத்த்ம்.

(2) **சிவசின்னம்** - திருநீறும் கண்டிகை (உருத்திராக்கம்)யும் சிவநெறியினர் உடம்பில் அணிந்துகொள்ளும் சிவசின்னங்கள் ஆகும். சின்னம் - அடையாளம், குறி.

(அ) இவற்றுள் திருநீறாவது நல்ல ஆவின் சாணத்தைச் சிவாக்கினியில் மந்திரங்கள் சொல்லி இட்டுத் தகித்ததால் கிடைக்கும் பொடி. இதில்

வெண்ணிறம் உடையதே அணியத் தக்கது. விபூதி, பசிதம், பஸ்மம், க்ஷாரம், ரக்ஷை என்னும் வடமொழிப் பெயர்கள் இதன் பெருமையை உணர்த்துவனவாய் வழங்குவன. விபூதி - விசேஷமான ஐசுவரியம், பசிதம் - ஒளியைத்தருவது. பன்பம் பாவங்களை நீற்றுவது. க்ஷாரம் - ஆபத்தை நீக்குவது ரக்ஷை - அச்சம் நீக்கிக் காப்பது.

திருநீற்றை அணியும்போது ‘‘சிவ, சிவ’’ என்னும் மனுவையோ ஈசானம் முதலாகக் கூறப்படும் ஐம்பெருமனுக்களையோ (பஞ்சப் பிரஹ்ம மந்திரங்கள்) உச்சரித்து அணிதல் வேண்டும். இது குழந்தைகளுக்குக் காப்பு (ரக்ஷை) ஆகவும் அணியப்படும்.

திருநீற்றுக்காப்பு ஞான அனலால் எரிக்கப்பட்ட பசு மல நீக்கத்தில் விளங்கும் சிவத்துவப் பேற்றிற்கு அறிகுறி ஆகும். இதன் மேன்மை திருஞானசம்பந்தர் அருளிச் செய்த திருநீற்றுப் பதிகத்தால் அறியத்தக்கது. பராவணம் ஆவது நீறு என அதன் கண்கவரும் இருக்கு (தொடர்) கருதத் தக்கது.

(ஆ) இனி, கண்டிகை என்பது உருத்திராக்கமணி. தேவர்கள் ஒரு காலத்தில் திருக்கயிலை முதல்வன் முன்சென்று, திரிபுரத்தசுரர்களால் தங்களுக்கு நிகழ்ந்த துன்பங்களை விண்ணப்பித்துக் கொண்டர்கள். அப்பொழுது, தேவர்கள் மாட்டு முதல்வனுக்கு இருந்த பேரிரக்கம் காரணமாக, அவன்றன் மூன்று திருக்கண்களின்றும் நீர் பெறுகிற்று. அந்நீரில் தோன்றியவை உருத்திராக்கமாமும், அதன்கண்மணியும் - என்பது புராணவுரை.

கண்டிகையைப் பூணுதல் உயிர்களுக்கு மும்மலங்களால் வரும் துயரங்களைக் களைதற்கு முதல்வனுடைய திருக்கண்களில் தோன்றும் திருவருளைப்பெறும் அருட்பேற்றுக்கு அறிகுறியாகும் அக்கமணிபூண்டு நீரில் முழுகும் போது, அம்மணியிற்பட்டு உடம்பில் விழும் நீர் கங்கையின் புனிதநீருக்குச் சமம் எனக் கருதப்படுகின்றது.

(3). **திருவைந்தெழுத்து எண்ணுதல்**. - ‘‘நமச்சிவாய வாழ்க!’’ என்னும் திருவாசகத்தொடரில் எழுவாயாக நிற்கும் பெயர் திருவைந்தெழுத்து எனப்படும். இது பிரணவத்தின் வேறொரு வடிவாயுள்ளது எனவும், எல்லா மந்திரங்களுக்கும் மூலமாவது எனவும், நால்வேத முடிபுணர்த்தும் மகாவாக்கியமாவது எனவும் பெரியோர்களால் கருதப்படுகிறது. இது பெரும்பெயர், சிவமூல மந்திரம், திருநாமம் என்று குறிக்கப்படுகின்றது.

‘‘வணக்கம் சிவனுக்கு’’ என்பது இதன் பொருள். ஆயினும், மெய்கண்ட நூல்கள் இம்மறைமொழியைச் சைவசித்தாந்தப் பொருள் நிலை முழுவதையும்

இணைத்துக்காட்டும் ஒரு வார்த்தை எனக்கொண்டு உரைக்கின்றன. இக்கருத்துத் திருமந்திரத்திலும் உள்ளது.

இவ்வாறு கருதுமிடத்து ந என்பது மூவகைப் பாரத்தைத் தொழிற்படுத்தும் முதல்வனது திரோதான சத்தியைக் குறிக்கும். மாயை கன்மங்கள் இதன்கண் அடங்கும். ம என்பது மூல மலத்தை குறிக்கும், ய உயிரைக் குறிக்கும், வா முதல்வனது சொரூபமாகவும் குணமாகவும் உள்ள திருவருள் ஒளியைக் குறிக்கும். சி என்பது அத்திருவருளுக்கு முதலாக உள்ள, மெய்யுணர்த்தோர்க்கு அனுபவப்படும் தூய பேரின்பவடிவச் சிவனைக் குறிக்கும்.

இப்பெரும்பெயர் அருளாசிரியன் மாணாக்கனது ஆன்ம வளர்ச்சி நிலைகண்டு அறிவுறுத்தும் வரிசைமுறை, எழுத்துக்களின் எண்ணிக்கை என்பவற்றில் ஏற்படும் வேறுபாடுபற்றித் தூலம், நுட்ப, அதிநுட்பம், பிராசாதம் எனப் பல வடிவங்களில் அறிவுறுத்தப்பெற்று எண்ணப்படும்.

அவற்றுள் ஒரு வடிவம் ‘‘நானேயோ! தவம் செய்தேன்; சிவாய நம எனப்பெற்றேன்’’ என்னும் திருவாசக மறையில் வருவது, இதில் நம என்பது முதல்வன் உயிரைப்பிறப்புக்களுட் செலுத்தி நிற்கும் ஊன நடனத்தைக் குறிக்கும், சிவா என்பது அவன் அதனைப் பிறவிக்கடலில் இருந்து எடுத்து, வீட்டு நெறிக்கண் உய்க்கும் ஞான நடனத்தைக் குறிக்கும். ய இவ்விரு நிலைகளுக்கும் இடைப்பட்டு, பிறப்பு நெறிநோக்காது ஞான நெறியில் நோக்குள்ளதாய் நிற்கும் பக்குவ ஆன்மாவைக் குறிக்கும்.

‘‘ஊன நடனம் ஒருபால், ஒருபாலா
ஞானநடம், தான்நடுவே நாடு’’
- திருவருட்பயன்

என்பது இக்கருத்தை உணர்த்தும் பாட்டு, இவ்வாறு சாதகனது ஆன்மவளர்ச்சி நிலைக்கு ஏற்ப ஓதும் நிலைகள் பலவுள்ளன. அவை உபதேச முகத்தால் பெறத்தக்கவை. ‘‘ஞான மெய்ந் நெறிதான் யார்க்கும் நமச்சிவாயச்சொலாம்’’ என்னும் திருமுறை சிந்திக்கத்தக்கது.

சைவத்துள் கூறப்படும் ஞானபாதப்பொருள் நிலையை ஒரு தேமா மரம் என உருவகித்துக்கொண்டால், அம்மரம் முழுவதையும் ஒருங்கே நுட்பமாக அடங்கக் கொண்டுள்ள விதையே திருவைந்தெழுத்து, திருவருளே அவ்விதைக்கு ஆதாரமாகிய நிலன். மெய்யன்பே நீர். அருணூலகன மரம், சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பவை முறையே அரும்பு, மலர், காய், கனி, அக்கனியின் சாறும் தீஞ்சு வையும் முடிநிலைப் பயனாகக் கூறப்படும் துரிய அருணிலையும், துரியாதீத ஆனந்த நிலையும் ஆகும் எனக்கூறலாம்.

(4). **குருலிங்க சங்கம வழிபாடு**. - முதல்வன் 'அங்கிங்கு எனாதபடி எங்கும் பிரகாசமாய் அருளொடு நிறைந்து' உள்ளவன், ஆயினும், அவன் உயிர்களுக்குத் தன்னை விளக்கி அணுக்கமாக இருந்து, அவ்வுயிர்கள் செய்யும் வழிபாட்டை ஏற்று அருள்புரியும் இடங்கள் - (1) அகத்தே உயிரும், (2) புறத்தே சிவலிங்கம் முதலிய திருமேனிகளும், ஆசாரிய வடிவம், மெய்யன்பர் திருவேடமும் ஆகும். இறைவன் எங்கெங்கும் பாலில் நெய்போல் மறைந்து நிற்பன். ஆயினும் மேற்குறித்த இடங்களில் தயிரில் நெய் போல் விளங்கி நின்று உயிர்களுக்கு அன்பு விளைதற்குக் காரணமாய் இருப்பன். இவ்வடிப்படை உண்மையிலிருந்துதான், திருக்கோயில் வழிபாடும், ஆசான் வழிபாடும், மெய்யன்பர் வழிபாடும் எழுந்தன.

(அ) **திருக்கோயில் வழிபாடு**; திருக்கோயில் வழிபாடு மேற்கூறிய அடிப்படை உண்மையாலும், சமயகுரவர்கள் அருளாணையாலும் சைவத்தில் முதன்மையும் தனிச் சிறப்பும் உடையதாகும். சிவநெறித் தலைவர்கள் நால்வரும் திருக்கோயில் வழிபாட்டைச் சிவ நெறியின் உயிர்க்கொள்கை எனத் தமது மெய்யுணர்வால் கண்டு, அநுட்டித்தும், அறிவுறுத்தியும் உள்ளனர். பொதுவாக்க இந்து சமய வரலாற்றிலும், சிறப்பாகச் சிவநெறி வரலாற்றிலும் திருக்கயிலை முதல் எண்ணப்படும் சிவபிரான் திருக்கோயில்கள், அன்றும் இன்றும் இனி என்றென்றும், மக்கட்கு உரிய கடவுள் மெய்ந்நெறி, பண்பாடு, கலை, நாகரிகம், ஒழுகலாறு, இலக்கியம் முதலிய வாழ்வியலின் மையமாக உள்ளது என்னும் உண்மை உணரத்தக்கது.

பழைமையாக உள்ள திருக்கோயில்கள் எல்லாம் மக்களால் அமைக்கப்படாமல், முதல்வன், தானே மக்கட்கு அருள்புரிதற் பொருட்டு முற்பட்டு விளங்கித் தோன்றிய அருள்நிலைத் தானங்களாக இருத்தல் அவற்றின் பழைய வரலாறுகளால் விளங்குகின்றது. திருவாதவூர் அடிகள் அருளிச்செய்த கீர்த்தித் திருவகவலும் க்ஷேத்திரக் கோவை முதலிய மூவர் திருப்பதிகங்களும் இவ்வுண்மையை வலியுறுத்துவன ஆகும். மகப்பேறு உள்ள ஒரு தாய்க்கு, கருவுயிர்த்தபின் மகவிற்கு உரிய பால், அதற்கு முன்னரே அவள் உடம்பில் அமைவது இயற்கை நியதி. அந்நியதிப்படி, எண்ணிறந்த உயிர்களைத் தன்மாட்டுத்தோற்றி முதல்வன்றன் திருவருளைப் பெற்று நலன் உறுதற்கு அவ்வருள் சுரக்கும் அருணிலைத் தானங்களாக இயற்கை முதல்வனால் அமைக்கப் பெற்றவையே புண்ணியத் தலங்கள் என்பது சிவ நெறித் தலைவர்களது ஒத்ததுணிபு, இதனால், நம்மனோர் இறைவனை ஒருவாறு விளங்கக் கண்டு அன்பால் வழிபடு உய்தற்குத் திருக்கோயில்களே சிறந்த இடங்கள் ஆகும் என்பது விளங்கும். மெய்யுணர்ந்த முத்தான்மாக்களும் தமது மெய்யுணர்வு காரணமாக இவ்விடங்களில் இறைவனை நேர்படக்கண்டு அன்பினால் இன்பம் ஆர்த்து வருதல் வரலாற்று உண்மை ஆகும் என மெய்கண்ட தேவர் அறுதியிட்டுக் கூறுகின்றார்.

திருக்கோயிலின் அமைபும், ஆங்கு நிகழும் வழிபாட்டு முறை முதலியனவும் சிவாகமங்களால் அறியத்தக்கன.

திருக்கோயிலில் மூலக் கருவறையில் உள்ள சிவலிங்கத் திரு மேனி சோதிப் பிழம்பாகிய பதிப்பொருளைக் குறிக்கும். முன் சிவலிங்கத்தை நோக்கி நிற்கும் இடபதேவர் வடிவம் தரும தேவதையையும் அறநெறியின் பயனாக் மெய்யுணர்வு எய்திய சுத்தான்மாவையும் குறிக்கும். பலிபீடம் சுத்தான்மாவை அகன்று நிற்கும் பாசத்தைக் குறிக்கும்.

அம்பலவாணர் திருவுருவம் திருவைந்தெழுத்தால் அமைந்தது, அவர்தம் அற்புதக் கூத்து ஐந்தொழிலைக் குறிக்கும். திருவாசி ஓங்காரத்தையும் அதன்கண் உள்ள ஐம்பத்தொரு சுடர்கள் அவ்வெண்ணிக்கையுள்ள மாத்ருகர்க்காங்களையும் ஆகும். அம்பலவாணர் திருமேனி ஆனந்தத்தையும், நிருத்தசபை துரிய அருணிலைத் தானத்தையும் குறிப்பன.

சோமாத்கந்தத் திருவுருவம் வயசி என்னும் முத்திபஞ்சாக்கரத்தின் உருவகமாகும் இவ்வாறு திருக்கோயிலில் உள்ள பிறவும் வேதாகமப் பொருள் முடிபுகளின் உருவகமாக அமைந்திருத்தல் கருதி உணரத்தக்கது.

## முடிவுரை

இதுகாறும் உரைத்தவற்றிலிருந்து ஒரு கருத்து விளங்குதற்கு உரியது. சிவநெறி பிறநெறிகளில் உள்ள நல்லன் எல்லாவற்றையும் திருந்தத் தன் அகத்தே இணைத்துக் கொண்டுள்ளதோடு, அவற்றில் அடங்காத பேருண்மைகளையும் விளக்குவதாக உள்ளது என்பதே அது. மேலும் இந்நெறி தனிப்பட்ட மக்களின் மன உணர்ச்சி நிலைகளைப் பற்றி எழுந்த சமயம் அல்லது மதம் என்னும் அளவில் நின்றுவிடாது, அறிவியல் முறை ஆராய்ச்சியை அடிப்படையாகக் கொண்ட ஒரு சிறந்த தத்துவக் கொள்கையாகவும் உள்ளது. இதன்கண் கொள்ளப்படும் முதல்வனாகிய உருத்திர சிவன் சமயத் தெய்வமாக மட்டுமின்றி வேதாந்தங்களுள் முடித்துக் கூறப்படும் முதற் பொருளாகவும் இருத்தல் மேற் கூறியவாறு பற்றியும், சுவேதாசுவதரம் முதலிய உபநிடதங்களாலும் விளங்கக்கூடியது.

இன்னும், பல சமய்ங்களிலும் முடிநிலையாகக் கூறப்படும் ஞான நெறி (தத்துவக்கொள்கை) வேறாகவும், அதனை அடைவதற்கு உபாயமாகக் கூறப்ப்டெளம் ஒழுக்கம், உபாசனை முதலியவை வேறாகவும் அமைந்து, ஞானநெறி எய்தினோர் கர்மம் உபாசனை என்பவற்றை விடுவர் எனக் கூறுவது இயல்பாக உள்ளது. ஆயின், சிவநெறியில் கிரியையும், பத்திநெறியும், ஞானநெறியும் ஒன்றோடொன்று இணைந்து இயைந்து படிமுறையால் பயன்

தருவனவாய் அமைந்திருத்தல் கருதத்தக்கது. இக்கருத்துப் பற்றியே வேதாந்த சித்தாந்த சமரசநிலை நின்ற தாயுமான அடிகள்,

“சன்மார்க்க ஞானமதின் பொருளும் வீறு
சமய சங்கே தப்பொருளும் தானொன்றாகப்
பன்மார்க்க நெறியினிலும் கண்ட(து) இல்லை;
பகர்வரிய தில்லைமன்றுள் பார்த்த போது அங்கு
என்மார்க்கம் இருக்குதெல்லாம் வெளியே என்ன
எச்சமயத் தவர்களும்வந் திறைஞ்சா நிற்பர்”

என்று வியந்து கூறுவார் ஆயினார். இதில் எல்லாம் வெளியே என்றது, எல்லாம் வெளிப்படை எனவும், எல்லா அடையாளங்களும் திருவருள் விளக்கமாகவே உள்ளன எனவும் இருபொருள்படும்.

சமய அநுட்டானத்தில், முதற்கண் செய்யப்படும் அத்திரசந்தி கன்மமல நீக்கம் குறித்தும், பின் இயற்றப்படும் ஆசமனம் மாயா மலத்தூய்மை குறித்தும், அதன்பின் செய்யப்படும் திருநீறணிதல், காநியாசம், அங்க நியாசம் என்பவை மூலமல நீக்கமும், சிவத்துவ விளக்கமும் குறிததும் நிகழ்வன ஆம். இவ்வாறே பிற கிரியைகளும் மந்திரம் பாவனை என்பவற்றோடு இயைத்துக் காணும்போது சன்மார்க்கம் எனப்படும் ஞானநெறியோடு ஒத்து, அதற்கு நிமித்தமாக இருத்தல் இவ்விடத்துச் சிந்தித்தற்கு உரியது.

இவ்வாறு தமிழ்ப் பெருமக்களுடைய மெய்ந்நெறிக் கொள்கை, சமயம், பண்பாடு, கலை என்பவற்றின் இணைப்பு நிலையாக உள்ள சிவநெறியும், அதன் உயிர் நிலையாக உள்ள திருக்கோயில், திருமடம் என்பவையும் தம்பண்டைய சீரும் வீறும் குன்றாமல், இக்காலத்து நமக்குக் கிடைத்துவரும் பொருட்டுறை சமுதாயத்துறை பற்றிய புதுக் கருத்துக்களை ஏற்குமாறு கொண்டு நடந்து, உலகில் தீதகன்று நன்மை பெருக, அம்மையப்பர் திருவருள் முன் நிற்க!

முற்றிற்று.